# மண்ணறை முழக்கம் மனதைத் துலக்கும்

தொகுத்தவர்:

கவிஞர் M.B. ஷிஹாபுத்தீன்

வெளியீடு:

சுலைமானியா பப்ளிஷர்ஸ்

மஃமூர் சென்டர், முதல் மாடி,
81, அங்கப்பன் தெரு,
சென்னை – 600 001.
போன்: 252 70 550 – செல்: 94443 55551

பொருளடக்கம்

முதல் பதிப்பு : ஆகஸ்ட் 1993
ஐந்தாம் பதிப்பு : ஜுலை 2007
ஆறாம் பதிப்பு : மார்ச் 2009

விலை ரூ. 17-00

## சமர்ப்பணம்

அகில உலக கோமான்
அண்ணலெம் பெருமான்
ஆருயிர் எம்மான்
ஆதி அந்த பூமான்
நபிமணி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்
அவர்களுக்கு இந்நூலை எங்களின் அன்பின்
காணிக்கையாக்குகிறோம்.

ஆசிரியர் & வெளியீட்டாளர்

சென்னையில் கிடைக்குமிடம்:

**தாவூது புக் சென்டர்**
184/9, அங்கப்பன் தெரு,
சென்னை - 600 001. போன்: 2524 0079

அச்சு அமைப்பு :
சுலைமானியா பப்ளிஷர்ஸ்
81, அங்கப்பன் தெரு,
சென்னை – 600 001.

பொருளடக்கம்

தினமணி, மணிச்சுடர், மக்காச் சுடர் போன்ற பத்திரிகைகளில் பல தலைப்புகளில் தொடர்ந்து கட்டுரை எழுதி வருபவரும், சமுதாயத் தொண்டருமான மௌலவி வந்தவாசி **ஷரபுத்தீன்** பாகவி அவர்கள் இனிப்புடன் அளித்த

# கனிப்புரை

புதுமைகள் பல விதம். அதில் இதுவும் ஒரு விதம் என்பது போல் கடந்த 10 வருடங்களாக சென்னை, ஈத்காஹ் மஸ்ஜிதின் கரும்பலகைகளில் கண்ணிய மிகுந்த பொன் மொழிகள் மிண்ணுவதை நாம் காணும்போது, யார் இந்த எழுத்துக்குச் சொந்தக்காரர் என்பதை சிந்திப்பதற்கு முன் நமது கை தானாகவே பாக்கெட்டில் இருக்கும் பேனாவை எடுத்து அப்பொன்மொழிகளை எழுதத் தொடங்கி விடுகிறதென்றால், அதுதான் அந்தக் கருத்துக் காவியத்தின் உண்மை. ஈத்காஹ் மஸ்ஜிதின் பிலால் ஜனாப் கவிஞர் M.B. ஷிஹாபுத்தீன் சாஹிபவர்கள் பல ஆண்டுகளாக மார்க்க மேதைகளின் நெருக்கத்தில் இருந்து பெற்ற அனுபவத்தின் மூலம் உதிரும் முத்துக்களே இந்த மாபெரும் சொத்துக்கள்.

சமுதாய ஆர்வலர்களே நீங்கள் ஆர்வமடையவே நூல் வடிவில் இதை உங்களுக்கு கவிஞர் அவர்கள் தொடுத்துள்ளார். இம் மலரை நன்கு நுகருங்கள். அதே சமயம் பாதுகாத்துப் படிக்க வேண்டிய பொக்கிஷம்தான் இந்த **'மண்ணறை முழக்கம் - மனதைத் துலக்கும்'**. **உண்மையில் மனதைத் துலக்கும். நுழையுங்கள்.**

என்றும் அன்புடன்,

30 - 7 - 92

வந்தவாசி ஷரபுத்தீன் பாகவி,

சென்னை - 1.

بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

## மரணமும் மறதியும்

சுகபோக மழையில் நனைந்து
அந்த சுகத்தில் மயங்கலாமா?
சுகம் காணும் போது பிடிக்கும்
அந்த மவுத்தை மறக்கலாமா?
இந்த பூமிதான் நிலையாகுமா?
நம்ம வாழ்க்கையும் சதமா?

(சுக)

நேற்று பார்த்த மனிதர் இங்கு
காணோம் எங்கே போனாரோ
நேற்று அவரை பார்த்த மனிதர்
நிலைத்து இங்கே வாழ்வாரோ
யாரும் இங்கு நிலைத்ததில்லே
யாரும் இதை நினைத்ததில்லே
உலக வாழ்விலே முடிவு மரணமே

(சுக)

பிறப்பு ஒன்று இல்லை என்றால்
இறப்பு ஒன்று இருக்காது
இறப்பு ஒன்று இல்லை என்றால்
இறைவன் அச்சம் பிறக்காது
அச்சமின்றி வாழும் போது
மிச்சமில்லை போகும்போது
தீமை சேதமே, நன்மை லாபமே

(சுக)



பொருளடக்கம்

இன்பம் கண்டு இனிமை கொண்டு
இதயம் கெட்டு வாழாதே
துன்பம் கண்டு துயரம் கொண்டு
தூய்மை விட்டு ஓடாதே
மறுமை நாளில் கேள்வி உண்டு
மனதில் இதனை நாளும் கொண்டு
வாழும் போதிலே
இனிமை நேரிலே

(சுக)

## மண்ணறை முழக்கம் மனதை துலக்கும்

ஒவ்வோர் ஆத்மாவும் மரணத்தைச் சுவைக்கக் கூடியதே, உங்களுடைய பிரதிபலன்கள் (பூரணமாக) உங்களுக்கு வழங்கப்படுவதெல்லாம் கியாமநாளில்தான். எனவே, எவர் நரகை விட்டு தூரமாக்கப்பட்டு சொர்க்கம் புகுமாறு செய்யப்படுகிறாரோ, அவர் நிச்சயமாக வெற்றியடைந்து விட்டார். இவ்வுலக வாழ்வு ஏமாற்றும் (அற்ப) சுகப் பொருளேயன்றி (வேறு) இல்லை.

*அல்குர்ஆன் : 3-185*

இன்னும் நிச்சயமாக இறுதி நாள் வருவதாக இருக்கிறது. அதில் எவ்விதச் சந்தேகமும் இல்லை. இன்னும் நிச்சயமாக அல்லாஹ் மண்ணறைகளில் இருப்போரை எழுப்புவான்.

*அல்குர்ஆன் : 22-07*

# மரணம் நினைவில் மலரட்டும்

ஒரு சமயம் நபிமணி (ஸல்) அவர்கள் தன் சபையில் உள்ள தோழர்களை நோக்கி, 'இறைவனுக்கு எப்படி வெட்கப்பட வேண்டுமோ அப்படி வெட்கப்படுங்கள்' என்று கூறியபோது, தோழர்கள், 'இறைவனுக்கு நாங்கள் வெட்கப்படத்தானே செய்கிறோம்', என்று கூறினார்கள்.

அதற்கு நபி மணி (ஸல்) அவர்கள், 'உங்களில் யார் வெட்கப்படுபவர்களாக இருக்கிறார்களோ அவர்கள் அவசியமாக எந்த இரவையும் மரணத்தைத் தம் கண்களுக்கு முன் நிறுத்தாமல் (இரவை) கழிக்க வேண்டாம். அவர்கள் தம் வயிற்றைப் பாதுகாத்துக் கொள்ளட்டும், அதனுடன் வயிற்றைச் சூழ்ந்துள்ள அவ்விஷயங்களை (மர்மஸ்தானங்களையும்) பாதுகாத்துக் கொள்ளட்டும். அவர்கள் தலையையும் பாதுகாத்துக் கொள்ளட்டும். தலையை சூழ்ந்துள்ள அவ்விஷயங்களையும் (நாவுகளையும்) பாதுகாத்துக் கொள்ளட்டும்.

அவர்கள் மரணத்தையும் மரணத்திற்குப் பிறகு மண்ணோடு மக்கிப் போவதையும் நிறுத்த வேண்டும். (மரணத்திற்குப் பின் இந்த உடல் அழுகிப் புழுகிப் போகும்) மேலும் ஆடம்பர வாழ்வை ஒதுக்கித் தள்ள வேண்டும். என்று கூறினார்கள்.

*அறிவிப்பவல் - ஆயிஷா (ரலி) நூல் - தர்கீப்*

மரண வேதனை மனிதர்களுக்குத் தெரிந்த அளவுக்கு மிருகங்களுக்கு தெரிந்திருந்தால் அவை மரணத்தை நினைத்து மெலிந்து தசையும் கொழுப்பும் உருகி வெறும் தோலும் எலும்புமாகக் காட்சியளிக்கும். மேலும் மரண

வேளையில் உண்டாகும் வேதனையானது உயிரோடிருக்கும் மனிதனைக் கூரிய வாளால் எழுபது தடவை வெட்டுவதைக் காணக் கடுமையாக இருக்கும்.

*திருநபி (ஸல்)*

## மரணத்திற்குப்பின் மண்ணறை

மரணத்திற்குப் பின் மீண்டும் நமக்கு வாழ்க்கையில்லை என்று எண்ணி விடாதீர்கள். உண்மையில் மரணத்திற்குப் பின்புதான் நிலையான வாழ்க்கை இருக்கிறது. அப்போது சிலர் தம்முடைய நற்செயலைக் கண்டு பேரின்பம் அடைவார்கள். இது அல்லாஹ்வின் முடிவான தீர்ப்பு. இந்த உலக வாழ்க்கையில் ஏமாந்து விடாதீர்கள். அதிலுள்ளவை யாவும் அழியக் கூடியதே. நேற்று இன்பத்தின் உச்சியில் நின்றவர்கள் இன்று துன்பத்தின் அடித்தளத்தில் நெளிகிறார்கள்.

உங்களுக்கு முன்னால் மரணித்தவர்களை எண்ணிப் பாருங்கள். அவர்கள் எப்படி வாழ்ந்தார்கள், எப்படி அழிந்தார்கள் என்று சிந்தனை செய்து பாருங்கள்.

நீங்கள் கட்டும் வீட்டை விட உயரமான வீடு கட்டினார்கள். உங்களை விடப் பல மடங்கு செல்வத்தில் மிதந்தார்கள். இப்போது அவர்கள் எங்கே! மண்ணுக்கடியில் இருக்கின்றார்கள். அந்த மண்ணறை நம்மை எல்லாம் சுவைப்பதற்குரிய காலத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறது. நீங்கள் யாவையும் மறந்து வாழ்கின்றீர்கள். ஆனால் அல்லாஹ் உங்களை மறக்கவில்லை. அவன் உங்களை கண்காணித்துக் கொண்டே இருக்கிறான். அவனுக்குப் பயப்படுங்கள்.

*அறிவிப்பவர் அலி (ரலி)*

## லுக்மான் ஹகீம் (அலை) அவர்கள் மகனுக்குப் போதித்த மரணத்தைப் பற்றிய மணியுரை

அருமை மகனே மரணம் வருவதைப் பற்றி உனக்கு சந்தேகம் இருக்குமானால் உனக்கு தூக்கம் வருவதை நீ தடை செய்து பார். அவ்வாறு தடை செய்யும் ஆற்றல் உன்னிடம் கிடையாது. இறந்தவர் இறுதி நாளில் எழுப்பப்படுவார் என்பதைப் பற்றி உனக்கு சந்தேகம் எழுந்தால் தூக்கத்தில் இருக்கும் போது கண் விழித்திருப்பதை தடை செய்து பார். அதனையும் செயல்படுத்தும் ஆற்றல் உன்னிடம் கிடையாது. இவற்றை நீ உன் சிந்தனைக்குக் கொண்டு வா. உன் ஆத்மா உன் கரத்தில் இல்லை. அது இறைவன் கரத்தில் உள்ளது என்பதை அறிந்து கொள். ஏனென்றால் தூக்கம் மரணத்திற்கு ஒப்பாகும். தூங்கிய பின் கண் விழித்தெழுவது மரணத்திற்குப் பிறகு மீண்டும் உயிரோடு எழுவதற்கு ஒப்பாகும். நிச்சயம் மரணம் ஒரு நாள் உன்னைப் பிடிக்கும். நீ மரணித்த பின் மீண்டும் எழுப்பப்படுவது உறுதி என்பதை ஒரு போதும் மறவாதே.

## மனந் தெளிய மார்க்கம்

மரணம், மண்ணறை, மறுமை இவற்றின் எண்ணங்களே மனித உள்ளத்தைக் கனிய வைக்கின்றது. தெளிவடையச் செய்கிறது. இவற்றின் பயம் இல்லை என்றால் ஒரு மனிதன் உள்ளத்தில் எப்படி கனிவும் தெளிவும் ஏற்பட முடியும்?

*இமாம் கஸ்ஸாலி (ரஹ்)*



பொருளடக்கம்

# ஒரே ஓர் இரவு

அலி (ரலி) அவர்கள் தமது ஆட்சி காலத்தில் கூறிய உரை. நான் எப்போதும் மரண பயத்தில் வாழ்ந்து கொண்டிருந்த நிலையில் ஒரே ஓர் இரவு நிம்மதியாக உறங்கினேன். அந்த இரவு அண்ணல் நபி (ஸல்) அவர்கள் மக்கா விட்டு மதீனா செல்கையில் என்னிடம் அமானப் பொருளைத் தந்து இவற்றை உரியவர்களிடம் கொடுத்து விட்டு நீர் மதீனா வருவீராக என்றார்கள். இந்த வார்த்தையை நிறைவேற்றும் வரையும் என் உயிரை இறைவன் வாங்க மாட்டான் என்ற நம்பிக்கையில் நான் அந்த இரவு நிம்மதியாக உறங்கினேன்.

எவரேனும் பாங்கு சொல்லும் போது பேசுவாராகில் மரண வேளையில் அவருடைய நாவு (கலிமா மொழிவதில்) தடுமாறும்.

# நீங்கள் உறங்கும் முன்

நீங்கள் உறங்குவதற்கு முன்னே மரணத்தை உங்கள் தலையின் பக்கம் வைத்துக் கொள்ளுங்கள். எந்த நிலையில் உங்களுக்கு மரணம் வர வேண்டுமென்று நினைக்கிறீர்களோ அந்த நிலையைப் பெறுவதற்கு முயற்சி செய்யுங்கள். எந்த நிலையில் மரணம் வரக்கூடாது என்று அச்சம் கொள்கிறீர்களோ அதனை விட்டுத் தப்பித்துக் கொள்ளுங்கள். இந்த நிலைமையன்றி மரணத்திற்குப் பலியாகாதீர்.

*ஹஸ்ரத் அபூகாஸிம் (ரஹ்)*



பொருளடக்கம்

# மரணம் ஒரு பயணம்

ஒரு முஸ்லிம் வெள்ளிக்கிழமை இரவிலோ அல்லது வெள்ளிக்கிழமை பகலிலோ மரணித்து விடுவாராயின் அல்லாஹ் அவரை மண்ணறையின் சோதனையை விட்டு பாதுகாத்துக் கொள்கிறான்.

*அறிவிப்பவர் இப்னு உமர் (ரலி) நூல் - திர்மிதி*

ஒருவர் நல்லவராக வாழ்ந்து மரணித்தபின், 'அதிகமாக நன்மைகளைச் செய்யவில்லையே' என்று தன்னைத்தானே நொந்து கொள்கின்றார்.

*நூல் - திர்மிதி*

ஒருவர் கெட்டவராக வாழ்ந்து மரணித்த பின், 'தாம் தீமைகளை தவிர்த்துக் கொள்ளவில்லையே' என்று தன்னைத்தானே நொந்து கொள்கின்றார்.

*நூல் திர்மிதி*

உலகத்தைப் பற்றிய அறிவு மரணத்திற்குப்பின் உங்களுக்கு எந்தப் பலனும் தருவதில்லை. உங்களைப் பற்றிய அறிவு மரணத்திற்குப் பின் உங்களோடு துணையாக வரும்.

*அல்ஹதீஸ்*

மரணத்தின் கஷ்டத்தை விட்டும் விடுதலை பெற விரும்பும் ஒருவர் தம் பெற்றோருக்காக செலவு செய்யவும்.

*அல்ஹதீஸ்*

நிச்சயமாக அல்லாஹ்வுக்காக சில வானவர்கள் இருக்கின்றார்கள். அவர்கள் மனிதர்களின் நாவின் மூலம் - மரணித்து விட்ட மக்களை 'நல்லவர் கெட்டவர்' என்று சொல்லும்படி செய்கின்றனர்.

*நூல் புத்ஹாரி*



மனிதன் திருந்துவதற்கும் படிப்பினை பெறுவதற்கும் மரணம் ஒன்று போதுமானதாகும்.

அல்ஹதீஸ்

தருமம் இறைவன் கோபத்தை தணிப்பதுடன் கெட்ட மரணத்தை விட்டும் உங்களைப் பாதுகாக்கின்றது.

உங்களின் குழந்தை உங்களின் மேலான சேமிப்பு ஆகும். உங்கள் குழந்தையை மரணத்தைக் கொண்டு திட்டாதீர்கள். நிச்சயமாக அது வறுமையை உண்டாக்கும்.

நூல் - முஸ்லிம்

ஜனாஸாவுக்குப் பின்னால் நடந்து வாருங்கள். ஜனாஸாவைப் பின்னால் விட்டு விடாதீர்கள்.

நூல் - திர்மிதி

## மேன்மையான மரணம் – 2

1. ஒருவர் ஹஜ்ஜை முடித்துக் கொண்டு திரும்பி வருகையில் மரணிப்பது.

2. ரமலான் மாதத்தில் நோன்பு இருக்கும் நிலையில் மரணிப்பது.

(விளக்கம்: இந்த இரண்டு நிலையிலும் அவர் பாவத்தை விட்டும் பரிசுத்தமாகி விட்டார்.)

திருநபி (ஸல்)

எவன் ஒருவன் வாழ்நாளில் என் மீது ஸலவாத்தை அதிகப்படுத்தினானோ அவனுடைய மரண வேளையில் அல்லாஹ் எல்லாப் படைப்பினங்களையும் அவனுக்குப் பாவமன்னிப்புத் தேட ஏவுகிறான்.

(நூல் - அல்மஆது வல் இஃதிஸாம்)



பொருளடக்கம்

## மண்ணறை மறுமை

மரணம் மனிதனுக்கு வேதனைத் தந்த போதிலும் மரணத்திற்குப் பின் ஏற்படும் வேதனை மேலும் கடுமையாக இருக்கின்றது. மரணத்தால் மனிதனுடைய ஆன்மா உடலை விட்டுப் பிரிகின்றது. ஆனால் (மண்ணறை) வேதனையும் மறுமையின் வேதனைகளும் மரண வேதனையை விட கடினமாகவே இருக்கும்.

*திருநபி (ஸல்)*
*நூல் - தப்ரானி*

## உலகம் ஒரு குப்பை மேடு

இவ்வுலகம், அகம்பாவம் கொண்டவர்களின் வாரிசுப் பொருளாகவும் வீணர்களின் குடி இருப்பாகவும் மறுமையை புறக்கணித்தவர்களின் கடைவீதியாகவும் பாவிகளின் மைதானமாகவும் மூஃமின்களின் குப்பை மேடாகவும் உள்ளது.

*நூல் நுஸ்ஹத்துல் மஜாலிஸ்*

ஒரு நாளில் ஆயிரம் தடவை ஸலவாத்து சொல்பவன் சொர்க்கத்தில் அவனது இருப்பிடத்தை காணாமல் மரணிப்பதில்லை.

*நூல் - கஷ்ப்புல் கும்மா*

ஒருவன் ஒரு விஷயத்தைச் சொல்ல நினைத்து மறதி ஏற்படுமானால் என் மீது ஸலவாத்து கூறிவிடவும். அது மறந்து போனதை நினைவுக்குக் கொண்டு வரும்.

*நூல் - தன்பீ ஹில் காபிலீன்*

# விட்டுச் சென்ற பொருள் யாருக்குச் சொந்தம்?

தோழர்களை நோக்கி திரு நபி (ஸல்)அவர்கள், உங்களுடைய பொருள்கள் மீது உங்களுக்குப் பிரியமா? அல்லது உங்களின் வாரிசுகளின் பொருள் மீது உங்களுக்குப் பிரியமா? என்று வினவ

எங்கள் பொருள்கள் மீதுதான் பிரியம் என்றார்கள், தோழர்கள். உங்களின் பொருள் என்றால் அல்லாஹ்வுக்காக செலவு செய்யக் கூடிய பொருள்களாகும். மறுமையில் அதுதான் உங்களுக்குப் பயன் தரக் கூடியதாகும். நீங்கள் விட்டுச் செல்லக் கூடிய பொருள் ( உங்களுடையது அல்ல) உங்களின் வாரிசுகளின் பொருள் ஆகும். இதனால் உங்களுக்கு எவ்விதப் பலனுமில்லை என்று திரு நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். *நூல் - ஷஹீஹுல் புகாரி*

மரணத்தை அதிகமாக நினைவு கொள்ளுங்கள், ஏனென்றால் அது பாவங்களை அழித்து விடுகின்றது.

*அறிவிப்பவர் - அனஸ் (ரலி)*

காலை நேரம் தோன்றி விட்டால் மாலை நேரத்தை எதிர் பார்க்காதே. உனது வாழ்நாளில் மரணத்திற்கு வேண்டியவைகளை தயார் செய்து கொள்.

*திருநபி (ஸல்) நூல் - புகாரி*

## ஏழு பெரும் பாவங்களை விட்டும் உங்களை பாதுகாத்துக் கொள்ளுங்கள்

1. அல்லாஹ்வுக்கு இணை வைப்பது
2. சூனியம் செய்வது



பொருளடக்கம்

3. கொலை செய்வது
4. வட்டியை உண்பது
5. அனாதையின் பொருளை உண்பது
6. போர்க்களத்தில் புறமுதுகு காட்டி ஓடுவது
7. பத்தினிப் பெண்கள் மீது அவதூறு சொல்வது

*நூல் புகாரீ முஸ்லிம்*

## சிந்தனைக்கு

நல்ல பொருளை எல்லாம் கீழே தள்ளி விட்டுக் குப்பைகளை மட்டும் தன்னுடன் இருத்திக் கொள்ளும் சல்லடையைப் போன்று ஆகி விடாதீர்கள்.

## இறைவனின் வெறுப்புக்குரியவன்

ஒரு மனிதனை இறைவன் வெறுக்கும் போது அவனை நன்மையில்லாத செயலில் ஈடுபாடு கொள்ளச் செய்வான்.

*இமாம் கஸ்ஸாலீ (ரஹ்)*

## நாயைவிட யார் தாழ்ந்தவர்கள்?

கொடியோன் ஹஜ்ஜாஜின் சபையில் ஹஜரத் ஹசன் பஸரி (ரஹ்) அவர்களை நிறுத்தப்பட்டிருக்கிறது. அவர்களுக்கு அருகில் ஒரு நாயும் நிறுத்தப்பட்டிருக்கிறது. அல்லாஹ்வுக்கு அஞ்சாத ஹஜ்ஜாஜ் இப்னு யூசுப், ஹசன் பஸரி (ரஹ்) அவர்களை நோக்கி உமக்கும் இந்த நாய்க்கும் இடையில் உள்ள வித்தியாசம் என்ன? என்று கேட்டபோது இமாம் ஹசன் பஸரி (ரஹ்) அவர்கள், 'ஹஜ்ஜாஜே மரணத்தின் பிடியில் நான் இருக்கும்போது லாயிலாஹா இல்லல்லாஹ் என்ற வார்த்தையை என் நாவு மொழியுமானால் இந்த நாயை விட



பொருளடக்கம்

நான் உயர்ந்தவன். அவ்வாறு அந்த கலிமா என் நாவில் வரவில்லையானால் என் போன்ற ஆயிரம் பேர்களை விட இந்த நாயே உயர்வானது.

## நற்குணம் கொண்டவன் காபிராக மரணித்தது ஏன்?

தொழுவதற்காகப் பள்ளிவாசலுக்கு நான் சென்று கொண்டிருந்த தெருவில் ஒரு இல்லத்தின் பக்கம் சென்று அங்குள்ளவர்களிடம் விசாரித்ததில், 'இந்த இல்லத்தில் ஒருவர் மரண வேதனை அடைகின்றார். மிக்க துயரத்தில் அலைமோதுகின்றார்.

நாங்கள் கலிமா சொல்லிக் கொடுத்தும் அவர் நாவில் கலிமா வரவில்லை.

தாங்கள் ஒரு மேதை. தாங்களாவது அவருக்கு கலிமா சொல்லிக் கொடுத்தால் ஒரு வேளை அவர் கலிமா சொல்லி மரணிக்க மாட்டாரா?' என்று சிலர் என்னைப் பணிவோடு வேண்டினர். இதனை ஒரு நன்மையாகக் கருதிய நான் மரண வேதனையில் இருந்த அந்த மனிதரின் அருகில் சென்று கலிமாவைச் சொல்லிக் கொடுத்தேன். உணர்வில்லாமல் கிடந்த அந்த மனிதர் கண் விழித்து என்னைப் பார்த்து, 'நான் கலிமா சொல்வதா சொல்ல மாட்டேன்' என்ற வார்த்தை அவர் நாவிலிருந்து வெளிப்பட்டதுதான் தாமதம் உடனே அவருடைய உயிர் பிரிந்து விட்டது.

அவருடைய மரண நிலையை அறிந்த நான் அவருடைய உறவினர்களை நோக்கி, 'இவர் காபிராக மரணித்து விட்டார். இவருக்கு ஜனாஸா தொழுகை

பொருளடக்கம்

நடத்தாதீர். இவருடைய சடலத்தை நம்முடைய மண்ணறையில் அடக்கம் செய்யாதீர்' என்று சொல்லிவிட்டு நான் வெளியேறினேன்.

பள்ளிவாசல் சென்று தொழுது விட்டுத் திரும்பி வரும் வழியில் - மரணித்தவரைப் பற்றி சில பேர்களிடம் விசாரித்ததில் அவர் நற்குணமுடையர். நல்லவர். இருந்தாலும் அவர் ஒரு குடிகாரராக இருந்தார் என்பதை அறிந்தேன். குடிகாரனாக இருந்ததினால்தான் அவன் காஃபிராக மரணித்தான். குடிப்பவரின் இறுதி முடிவு இதுதான் என்று சொன்னேன்.

*சொன்னவர் அப்துல் அஜீஸ் தீ ரினி நூல் - ஜவாஜிர்*

## அன்னையின் பொருத்தமே அல்லாஹ்வின் பொருத்தம்

நபிமணி (ஸல்) அவர்களின் அன்பார்ந்த தோழர் ஹாரித் (ரலி) அவர்கள் மரண வேளையில் கலிமாவை சொல்ல முடியாத நிலையில் தத்தளிக்கின்றார். இந்த செய்தி நபிமணி (ஸல்) அவர்களின் காதில் விழுகிறது. உடனே நபி (ஸல்) தம் தோழர்களுடன் தோழர் ஹாரித் (ரலி) அவர்களின் வீட்டில் நுழைகின்றார்கள். ஹாரித் (ரலி) அவர்களின் அருகில் சென்று கலிமாவைச் சொல்லிக் கொடுக்கும் போது அவர் நாவில் கலிமா எழவில்லை. நபிமணி (ஸல்) அவர்கள் ஹாரித் அவர்களை நோக்கி ஏன் உங்களால் கலிமா சொல்ல முடியவில்லை என்று கேட்டபோது, 'இறைதூதரே எனக்கு முன்னால் நரகத்திலிருந்து ஒரு நெருப்புக் குண்டம் ஒளி வீசிய வண்ணம் இருந்து கொண்டு நான் ஒவ்வொரு தடவை கலிமா சொல்லச் முனையும்போதும்

அது என்னைத் தடுத்துக் கொண்டிருக்கிறது' என்று கூறியதைக் கேட்ட நபிமணி (ஸல்) அவர்கள், 'ஏன் அப்படி' என்று கேட்டார்கள்.

அதற்கு, 'என் மீது என் தாயாருக்கு பொருத்தமில்லை போல் தெரிகிறது' என்று கூறினார் ஹாரித்.

உடனே நபிமணி (ஸல்) அவர்கள் அவருடைய தாயாரை வரவழைத்து உங்கள் மகனை நீங்கள் மன்னிக்க வேண்டும். இல்லாவிட்டால் உங்கள் மகன் நெருப்புக் குண்டத்திற்குப் பலியாக நேரிடம் என்று நபிமணி (ஸல்) அவர்கள் கூறியதைக் கேட்ட அத்தோழ ரின் தயாார் மன்னிப்பதற்கு மறுத்துவிட்டார்.

அப்போது நபிமணி (ஸல்) அவர்கள் இறைவனிடம் கை ஏந்தி துஆ செய்ய முனைந்தபோது வானவர் ஜிபுரீலர் வருகை தந்து இறைநபியே, உங்களுக்கு அல்லாஹ் சலாம் சொல்லுகின்றான். உங்கள் தோழரைப் பொறுத்த வரையில் பெற்றோர் இவரைப் பொருந்திக் கொள்ளாதவரை இறைவனும் இவரைப் பொருந்திக் கொள்வதில்லை என்று இறைவன் கூறுகின்றான் என்று கூறினார்கள். இதனைக் கேட்ட நபிமணி (ஸல்) அவர்கள் அவருடைய தாயாரை மன்னிப்பளிக்கச் செய்தார்கள். பிறகு ஹாரித் (ரலி) அவர்கள் கலிமா மொழிந்த பின் மரணமடைந்தார்.

## மரண வேளையில் ஷைத்தான்

நீங்கள் மரணிக்கும் சமயத்தில் ஷைத்தான் உங்கள் முன் தோன்றி கிருஸ்துவனாக மரணிப்பீராக, யூதனாக மரணிப்பீராக என்று கூறுவான். இதற்குச் சரியான பதில் முடியாதென்பதாகும்.

*திருநபி (ஸல்) அல்ஹதீஸ்*



பொருளடக்கம்

மரணித்தவர்களின் கண்கள் விழிப்படைந்தவாறே இருப்பதை நீங்கள் பார்த்ததுண்டா? என்று நபிமணி (ஸல்) அவர்கள் தோழர்களை நோக்கி வினவினார்கள். அதற்கு ஆம் என்று தோழர்கள் பதில் கூறினார்கள். அந்நேரம்தான் தம்மை விட்டு பிரிந்து செல்லும் ஆத்மாவை அவர்கள் பார்க்கின்றார்கள்.

*அறிவிப்பவர் - அபூஹுரைரா (ரலி) நூல் - முஸ்லிம்*

## மூ:மின்களுக்கு வரவேற்பு

ஒருவன் மரணித்து விட்டால் இவருக்கு முன்னால் மரணித்து விட்ட இவருடைய சொந்தபந்தங்கள் ஆலம் அர்வாஹில் இவரை வரவேற்றுப் பேசி மகிழ்கின்றனர்.

*நூல் - இப்னு அப்துன்யா*

## மரணித்தவர் கண்ணால் பார்க்கின்றார், காதால் கேட்கின்றார், கனிவுடன் பேசுகின்றார்

மரணித்தவர் (தனது ஆடைகளைக் கழற்றி) குளிப்பாட்டுபவர்கள் யார் என்பதையும், கபன் ஆடையை அணிவிப்பவர் யார் என்பதையும் (தன்னை சந்தூக்கில் வைத்து) தூக்கிச் செல்பவர்கள் யார் என்பதையும், (மண்ணறையில் வைத்து) அடக்கம் செய்பவர்களையும் (தனது கண்ணால்) பார்த்து தெரிந்து கொள்கிறார்கள்.

*அல் தப்ரானி*

உயிரை வாங்கிய இஸ்ராயீல் (அலை) அவ்வுயிரை கையில் ஏந்திய வண்ணம் இருக்கையில் மனிதர்கள் மரணித்தவரை நல்லவர்கள் என்று பாராட்டிப் பேசும் வார்த்தைகளை கேட்டு அம்மனிதரின் உயிரை நோக்கி, 'மனிதர்கள் உம்மை பாராட்டுவதைக் கேட்டீரா?' என்று கேட்கின்றனர்.

## மரணித்தவரின் ஆடைகளைக் கழற்றுகின்றபோது

படைத்தவன் மீது ஆணையிட்டுச் சொல்கிறேன். 'எனது ஆடைகளை மென்மையாகக் கழற்றுங்கள். இப்பொழுது தான் உயிர் வாங்கும் வானவரின் கோரப்பிடியை விட்டு விடுதலையடைந்துள்ளேன்' என்றும்

## குளிப்பாட்டும்போது

படைத்தவன் மீது ஆணையிட்டுச் சொல்கிறேன். என் மேனியில் சூடான தண்ணீரைக் கொண்டோ அல்லது குளிரான தண்ணீரைக் கொண்டோ ஊற்றாதீர்கள். உயிர் வாங்கும் வானவர் என் உயிரை வாங்கியதால் மேனியின் வேதனையால் நொந்தவனாக இருக்கிறேன் என்றும்

## கழுவி சுத்தம் செய்யும்போது

என் மேனியைப் பலமாக அழுத்தித் தேய்க்காதீர்கள். மேனியை விட்டு உயிர் பிரிக்கப்பட்டதால் நான் புண்ணாக இருக்கின்றேன் என்றும்

## ஜனாஸாவை சந்தூக்கில் வைத்து தூக்கிச் செல்லும்போது

என்னுயிர் சகோதரர்களே! என் நேசத்திற்கு உரியவர்களே, என்னுடைய வாழ்க்கை என்னை நாசப்படுத்த வேண்டாம். தெளிந்தவர்களே, விழித்துக் கொள்ளுங்கள். நான் என் மனைவி மக்களுக்காக சொத்துக்களை விட்டுச் செல்கிறேன். நீங்கள் நலமாக வாழ்கின்ற போது என் மீது பாவங்களையும் கடன் சுமைகளையும் சுமத்தி விடாதீர்கள் என்றும்

## ஜனாஸா தொழுகை நடத்தும் போது

மரணித்தவர்களை மறந்து விடுவார்கள் என்று நான இவ்வளவு காலமும் தெரிந்தேன். நீங்கள் என்னை மறந்து விடாதீர்கள் என்றும்

## மண்ணறையில் அடக்கிய பிறகு

நான் பெற்ற செல்வங்களே,

மிகுதமான செல்வங்களை உங்கள் (எதிர்கால வாழ்விற்காக) விட்டு வைத்துள்ளேன். அந்தச் செல்வங்களில் கொஞ்சமேனும் எனக்காக செலவு செய்ய மறந்து விடாதீர்கள். உங்களுக்கு மார்க்க நெறியை உபதேசித்துள்ளேன். எனக்காக நீங்கள் பிரார்த்தனை புரிவதை விட்டு விடாதீர்கள் என்றும் மரணித்தபின் மய்யித் கூறுவதாக ஆயிஷா (ரலி) அவர்கள் எடுத்துக் கூறினார்கள்.

*அல்ஹதீஸ்*

## அபகரிப்பவர்கள்

*இஸ்ராயீல் (அலை) மனிதனின் உயிரை அபகரிக்கின்றார்.*
*வாரிசுகள் மனிதனின் பொருளை அபகரிக்கின்றனர்.*
*புழுக்கள் மனிதனின் சடலத்தை அபகரிக்கின்றன.*
*வழக்காளிகள் மனிதனின் நன்மைகளை அபகரிக்கின்றனர்.*

*அலி (ரலி)*

## உலகம் தெரிந்து கொள்வதற்காக

உலக நாடுகளை வென்று இனி வெல்வதற்கு உலகில் நாடுகளே இல்லை என்று சொல்லும் அளவிற்குப் புகழோடும்,

பொருளோடும் வாழ்ந்தவன் மகா அலெக்ஸாண்டர். வாழ்ந்து முடிந்து இவ்வுலகிலிருந்து பிரிந்து செல்லும் கடைசித் தருணத்தில் அவன் தன் செயலாளரை அழைத்து,

‘நான் இறந்த பின் என்னை பேழையில் வைத்து இரண்டு கைகளையும் வெளியே விரித்து வைத்து எல்லோருக்கும் தெரியும் படி என் உடலைக் கொண்டு செல்ல ஏற்பாடு செய்’ என்றான். செயலாளர் காரணம் கேட்டபோது உலகையே வெற்றி கொண்ட இந்த மாவீரன் அலெக்ஸாண்டர் இந்த உலகுக்கு வந்தபோதும் கையை விரித்துக் கொண்டே வந்தான். இவ்வுலகை விட்டுப் போகும் போதும் வெறுங்கையை விரித்த வண்ணமே செல்கிறான் என்பதை உலகம் தெரிந்து கொள்ளட்டும் என்று கூறினான்.

நூல் - அல் இர்ஷாத்

## மனிதனுக்கு மூன்று நண்பர்கள்

1. அவன் மரணம் அடையும்வரை அவனோடு இருப்பவர்
2. அவனுடன் மண்ணறை வரை செல்பவர்
3. மஹ்ஷர் வரையில் கூடவே இருப்பவர்

1. மரணம் வரை - பொருள்
2. மண்ணறை வரை - உற்றார் உறவினர்
3. மஹ்ஷர் வரை - அவன் செய்த செயல் ( நன்மை தீமை)

திருநபி (ஸல்)

## ஷஹீதுடைய பதவி மற்றவர்களுக்கு உண்டா?

ஷஹீதானவர்களுடன் சொர்க்கத்தில் மற்றவர்கள் யாரும் இருப்பார்களா? என்று ஆயிஷா (ரலி) வினவினார்கள். அதற்கு திரு நபி (ஸல்) அவர்கள் பதிலளிக்கையில் தம் பாவங்களை எண்ணி மனம் வருந்தி அழுதவர்கள் அவர்களுடன் இருப்பார்கள் என்று கூறினார்கள்

# மரணத்தை மறந்தவர்கள்

1. பாவ மன்னிப்பைத் தாமதப் படுத்துவார்கள்

2. உலகில் அளவு மீறி பேராசை கொள்வார்கள்

3. இறைவழிபாட்டில் சோம்பேறியாக இருப்பார்கள்

*(ஒரு மகான்)*

# மண்ணறை வேதனை உண்டா?

மண்ணறை வேதனையை விட்டு இறைவன் உங்களை காத்தருள்வானாக என்று ஒரு யூதப் பெண் என்னிடம் கூறினார். நான் நபி (ஸல்) அவர்களிடம் மண்ணறை வேதனையைப் பற்றி கேட்டேன், அதற்கு அவர்கள், ஆம் நிச்சயமாக மண்ணறை வேதனை உண்மைதான். நிச்சயமாக மய்யித்துகளுக்கு வேதனை உண்டு. அதனை விலங்குகளும் செவியுறுகின்றன என கூறினார்கள். மேலும் ஒவ்வொரு தொழுகைகளிலும் மண்ணறை வேதனையை விட்டும் இறைவனிடம் காவல் தேட வேண்டும்.

*அறிவிப்பவர் - ஆயிஷா (ரவி)*

*நூல் - புகாரி, முஸ்லிம்*

# மண்ணறைப் பற்றி மாநபி (ஸல்)

மண்ணறை என்பது மனிதன் மறுமை நாளை நோக்கிப் போகும் பயணத்தின் இடையில் தங்கிப்போகும் ஒரு பயணிகள் விடுதியாகும். அந்த விடுதியில் நிகழும் சோதனைகளிலிருந்து அவன் விடுதலை பெறக் கூடுமாயின் அதற்குப் பின் உண்டாகும் சோதனைகளை மிக எளிதாகக் காண்பான். அந்த பயணிகளின் விடுதியாகிய மண்ணறையை

விட்டு விடுதலை பெற முடியாதவன் பின்னால் நிகழக் கூடிய சோதனைகளுக்கு ஆளாகுவான். துன்பத்துயரங்களில் தத்தளிப்பான்.

ஒரு சமயம் நபிமணி (ஸல்) அவர்களுடன் தொழர்கள் சிலர் பள்ளிவாசலில் அமர்ந்திருந்தார்கள். அது சமயம் ஒரு இளைஞர் அழுது கொண்டே நபிமணி (ஸல்) அவர்கள் அருகில் வந்து, 'யார ஸூலல்லாஹ் எனது தந்தை மரணித்து விட்டார். அவருக்கு செய்ய வேண்டிய முறைகளுக்கு என்னிடம் செலவு செய்ய எதுவுமே இல்லை' என்று சொன்னார். உடனே நபிமணி (ஸல்) அவர்கள் அருகில் இருந்த அபூபக்கர் (ரலி) உமர் பாரூக் (ரலி) அவர்கள் இருவரையும் அந்த இளைஞருக்கு உதவுவதற்காக அனுப்பிவைத்தார்கள். சிறிது நேரம் தான் கழிந்திருக்கும். அந்த இளைஞருடன் சென்ற அபூபக்கர் (ரலி), உமர் (ரலி) இருவரும் பதட்டம் அடைந்தவர்காளக நபிமணி (ஸல்) அவர்களிடம் வந்து, 'இறைதூதரே, அந்த மய்யித்தை நாங்கள் பார்த்தோம். ஏது சொல்வோம். அந்த மய்யித் முகம் பன்றியின் முகமாக மாற்றப்பட்டிருக்கிறது. அந்த பயங்கர காட்சி எங்களை அதிர்ச்சியில் ஆழ்த்திவிட்டது என்று சொன்னார்கள். இதனை கேட்ட நபிமணி (ஸல்) அவர்கள் மிகவும் வேதனையடைந்தவர்களாக அந்த வீட்டை அடைந்தார்கள். இரு கை ஏந்தி இதயம் வருந்தி இறைவனிடம் துஆ கேட்டார்கள். உடனே மய்யித்துடைய முகம் மனித முகமாக மாறியது. பின்பு அந்த மய்யித்தைக் குளிப்பாட்டி, கஃபனிட்டு தொழ வைத்தபின் நல்லடக்கம் செய்ய முனைந்தபோது அந்த மய்யித் மீண்டும் பன்றியின் முகமாக மாறிவிட்டது. நவூது பில்லாஹி மின்ஹா. இதனைக் கண்ட



பொருளடக்கம்

நபிமணி (ஸல்) அவர்கள் அருகில் நின்ற அந்த இளைஞரை அழைத்து உன்னுடைய தந்தையின் நடைமுறை எப்படியிருந்தது என்பதைக் கேட்ட போது, 'என் தந்தை தொழுகையில் அசட்டையாக இருந்தார்' என்று அந்த இளைஞர் பதில் கூறினார். உடனே நபிமணி (ஸல்) அவர்கள் தோழர்களை பார்த்து, 'இது உங்களுக்கு ஒரு படிப்பினை. ஐங்காலத் தொழுகையைத் தவற விடாதீர்கள். ஏன் என்றால் நாளை கியாம நாளில் மண்ணறையிலிருந்து தொழுகை விட்டவர்களை எழுப்பும் போது பன்றி முகமாக எழுப்பப்படும்' என்று கூறினார்கள். நவூது பில்லாஹி மின்ஹா

*நூல் - பஹ்ஜதுல் அன்வர்*

ஏ ஏழையானவனே! தனது செயல்களுக்குமுன் சிக்கிக் கொண்டு கிடைப்பவனே அசட்டத்தனமென்னும் நித்திரையை விட்டும் விழித்தெழுந்து எச்சரிக்கையாயிருந்து கொள். ஆண்டவன் உன் மீது கடமையாக்கியவைகளைத் தவறாது எடுத்து நடந்து கொள். அவன் விலக்கியவைகளை விட்டு விலகி இருந்து கொள். மரணித்துப் போனவர்கள் பக்கம் உன் சிந்தனையைச் செலுத்திச் சீர்திருத்தம் பெற்றுக் கொள். சிங்காரமான விரிப்புகளின் மீது வீற்றிருந்து சுந்தரமான வார்த்தைகளாடிக் கொண்டிருந்த எத்தனையோ பேர்களை இம் மரணமானது திடீரெனப் பிடித்து மண்ணுக்குள் சேர்த்து மறைத்து விட்டதை நீ பார்க்க வில்லையா? உனது பிதாக்கள் புத்திரர்களெங்கே? பாலர்கள், பணியாளர்கள் எங்கே? மற்றும் கூட்டத்தார், குடும்பத்தார்களெங்கே? அன்பரும், நண்பரும், அருமை சிநேகிதர்களுள் அநேகரும், பெரிய சிறிய சகோதரர்களுமெங்கே? அவர்களெல்லாம் மரித்து



பொருளடக்கம்

மண்ணறைக்குச் சென்று விட்டனர். எனவே மரண வேதனையின் பால் உனது கவனத்தைச் செலுத்துவாயாக. எவன் மரணமடைந்து விட்டானோ (வெளித் தோற்றத்தில்) அவனது காரியம் ஒருவாறு முடிந்து விட்டது எனறாலும் அதற்குப்பின் தான் அவனுக்கு அநேக அபார நிகழ்ச்சிகள் நடைபெறவிருக்கிறதென்பதை மறந்து விடக் கூடாது. (கப்ரில்) மண்ணறையில் உன்மீது நிகழவிருப்பவைகளான நெருக்குதல், வெருட்சி, முன்கர், நக்கிர், இரு மலக்குகளின் கேள்வி ஆகியவைகளில் உனது கவனத்தைச் செலுத்தி ஆழ்ந்து சிந்தனை செய்து பார். பிரதி தினமும் (கப்ரு) மண்ணறையானது, 'நான் வெருட்சியான வீடாக இருக்கின்றேன். நான் இருளான வீடாக இருக்கின்றேன். நான் பந்து மித்திரர்களை விட்டு நீங்கள் பிரிந்திருக்கக் கூடிய வீடாக இருக்கின்றேன். நானே உனது வாசஸ்தலம், உனது இருப்பிடமும் நானே, உனது புனித குழியும் நானே, ஆதலின் ஆண்டவனிடம் தனது பாவங்களை மன்னிக்கத் தேடுகிறவன் யாரேனுமுண்டா? தனது பாவங்களில் சிந்தனையைச் செலுத்தி அதற்குப் பரிகாரம் தேடுகிறவன் யாரேனுமிருக்கின்றானா? என அறை கூவி அழைத்துக் கொண்டிருக்கிறது.

ஏ மானிடனே! இன்ப சுகங்களைத் தகர்த்து விடுவதும், கூட்டத்தைக் கலைத்துச் சின்னாபின்னப் படுத்துவதுமான 'மரணம்' உன்னை வந்தடுத்து, அதனால் நீ பச்சாதாபத்தில் ஆழ்ந்து, உனது வடிவம் மாறுதலடைந்து, உறுப்புகளெல்லாம் அதனதன் ஸ்தானங்களை விட்டுப் புரண்டு ஒடிந்து விட எத்தனித்து, உனது கண்களிலிருந்து நீர் ததும்பியோடி, தோற்றம் விகாரப்பட்டதாக உனது அழகிய சரீரம் முற்றும்



பொருளடக்கம்

மாறுதலடைந்து இருக்கும் நிலையில், உனது அன்பர்களும், நண்பர்களும் உன்னை விரைவில் எடுத்துச் சென்று, நெருங்கிய ஒரு குழியினுள் சேர்த்து, உன் மீது கல், மண்களைத் தள்ளிய பின் நீ அங்கு தனித்தவனாகவும், நினைத்தவனாகவும், ஒற்றையாளவனாகவும், தவறிப் போன நன்மைகள் குறித்துப், பரிதாபப் பட்டு அழுபவனாயுமிருக்கும் அந்நேரத்தில் உன் நிலைமை என்னவாகும்? என்பதை யோசித்துப் பார். புத்தியுள்ளவன் இக்கோர சம்பவங்களையும், பரிதாபத்திற்குரிய நிலைமைகளையும், உற்றுணர்ந்து தனக்குள் உணர்ச்சி வருத்திக் கொள்ள வேண்டாமா? நீ இவ்வுலகத்திலேயே சதா ஜீவித்திருப்பாயென ஆண்டவனிடம் இருந்து ஏதேனுமொரு உடன்படிக்கை பெற்றிருக்கிறாயா? இல்லை நிச்சயமாக இல்லை.

அல்லாஹ்வின் மீது ஆணையாக! சுவாசிக்கும் எந்த ஒரு ஆன்மாவும் மரணத்தால் பீடிக்கப்பட்டு, மண்ணினுள் புதைக்கப்படுவதேயன்றி வேறில்லை. அதன் மரண காலம் வந்து விடுமாயின் ஒரு வினாடியேனும் முந்தவும் இயலாது, பிந்தவும் இயலாது. மேலும் தான் சம்பாத்தியம் செய்த கருமங்களின் மீது பச்சாதப்பட்டுக் கொண்டிருக்கவே நேரும்.

இவ்வற்ப உலகமானது நிச்சயமாகப் பிரயாணத்தை சித்தம் செய்யத் தக்கதாகவும், அழிவிற்கு உரித்தானதாகவும் உள்ளதே. இதை விட்டுப் பின் ஒரு காலத்தில் பிரயாணமாய் விட வேண்டும் என்ற நிபந்தனையின் படியல்லாது. இங்கு ஒருவரும் வரவில்லை. எல்லா ஆன்மாக்களும் மரணச் சுவையை அனுபவிக்க வேண்டியவைகளே. சிருஷ்டிக் கர்த்தாவாகிய அல்லாஹ்வைத் தவிர்த்துள்ள எப்பொருளும் அழிவது அவசியமே. எவனேனுமொருவன் இவ்வுலகிலேயே

சதாகாலமும் ஜீவித்திருந்தால் கூடுமாயின், ஜின்களுக்கும், மானிடர்களுக்கும் தலைவரான நமது நபி பிரான் (ஸல்) அவர்கள் (மரணமெய்தால்) ஜீவித்திருப்பார்கள் என்ற உண்மையை நீ உணரவில்லையா? நிச்சயமாக இவ்வற்ப உலக வாழ்வானது ஏமாற்றத்திற்கும், கவலைக்கும் இலக்காயுள்ள சாதனமேயன்றி வேறல்ல என்பதை நீ அறியவில்லையா? மரணித்து பின் எழுப்பப்படும் அந்நாளில் (மலக்குகள் மூலம்) கணக்கு ஏட்டில் எழுதி வைக்கப்பட்டிருந்த ஒவ்வொருபெரிய சிறிய விஷயங்களைக் குறித்தும் கணக்கு வாங்கப்படும். மக்களின் பார்வைகள் மேல் நோக்கி நின்று கொண்டிருக்கும். சந்திரன் ஒளிமாறிவிடும், சூரியன், சந்திரனிரடண்டையும் ஒன்று சேர்க்கப்படும். இவைகளைக் கண்ணுற்ற மானிடம் தப்பியோடுமிடம் எங்கே? எனக் கூறுவான். அப்பொழுது அவன் முற்படுத்தியவைகளையும், பிற்படுத்தியவைகளையும் அவனுக்கு ஞாபகமூட்டப்படும்.

ஏ அசட்டைத்தனம் படைத்தவனே! மிக வெறுப்பும் கடுமையுமான இத்தகைய கஷ்டங்கள் எல்லாம் உன் மீது நடைபெறவிருக்கும் நிலைமையில் நீ கவலையற்றிருப்பதன் காரணமென்ன? அவைகளை பொறுத்துக் கொள்ளப் போகிற சக்தி பெற்றிருக்கிறோமென நீ நினைத்துக் கொண்டிருக்கிறாயா? அல்லது நீ உன்னைக் கல்லைப் பார்க்கினும் கெட்டியானவன் எனக் கருதிக் கொண்டாயோ கல்லேனும்ஒரு சமயம் ஆண்டவனது அச்சத்தால் பிளந்து அதனின்றும் தண்ணீர் ததும்பியோடுகின்றது. நீ அறிபவனாயும், கேட்பவனாயும், பார்ப்பவனாயுமிருந்தும் உனது இருதயம் இளகுவதில்லையோ, உனது காதுகள் செவிடுபட்டுவிட்டனவோ? கண்கள் குருடுபட்டு விட்டனவோ,



பொருளடக்கம்

தயாளனும், தத்துவங்களின் சிருஷ்டிக் கர்த்தாவுமாகிய இறைவனே எங்கள் மீது கிருபை கூர்ந்தருள்வாயாக. எங்கள் குற்றங்களைப் பாராட்டாது மன்னித்தருள்வாயாக. அபாரமாகிய திடுக்கத்தினின்று எங்களைக் காத்தருள்வாயாக.

தப்பியோட முடியாது யாதொரு ஒதுங்குமிடமும் இல்லை. அந்நாளில் (இறுதி நாளில்) உனது இறைவனிடமே நீ நிற்க வேண்டிய இடமிருக்கிறது. அந்நாளில் முற்படுத்தியதையும், பிற்படுத்தியதையும் மனிதனுக்கு அறிவிக்கப்படும்.

*அல்குர்ஆன் 75 - 10 - 13*

*ரபீயுல் அவ்வல் 3-ம் குத்பாவின் உபதேசம்*

## கண்ணுக்கு எட்டிய வரை மண்ணறையின் விரிவான தோற்றம்

நான் அஹ்னப்பின் கைஸ் (ரலி) அவர்களின் நல்லடக்கத்தில் கலந்து கொண்டேன். அவர்களை நல்லடக்கம் செய்யும் போது அவர்களுடைய மண்ணறையில் நான் இறங்கினேன். அவர்களை நல்லடக்கம் செய்த பின் அவர்களுடைய மண்ணறை எனது கண்ணுக்கு எட்டிய தூரத்திற்கு விரிவானதை நான் எனது கண்ணால் பார்த்தேன். இதனை எனது தோழர்களிடமும் கூறினேன்.

*அறிவிப்பவர் - அப்துர்றஹ்மான் பின் உமாரா (ரலி)*

## மனிதர் குரலை மரணித்தவர் செவி ஏற்குமா?

நபிமணி (ஸல்) அவர்கள் இஸ்லாத்தை தழுவும் படி ஒருவரை கூறவும், அவர் என் குழந்தை இறந்து விட்டது. அவனை நீங்கள் எழுப்பித் தந்தால் நான் இஸ்லாத்தில்



பொருளடக்கம்

சேர்ந்து விடுகிறேன் என்றார். அந்தக் குழந்தையின் மண்ணறைக்குச் சென்று நபிமணி (ஸல்) அவர்கள் அக்குழந்தையை அழைத்தார்கள். உடனே அக்குழந்தை அடிபணிந்தேன் என்று மறுமொழி பகர்ந்தது, திரும்பி இந்த உலகத்திற்கு வர விருப்பம் உண்டா என்று கேட்டார்கள். 'இறைதூதரே! அல்லாஹ்வின் ஆணையாக! எனக்கு அந்த விருப்பம் கிடையாது. இம்மையை விட மறுமையே மேலாக இருக்கும்' என்று பதில் கூறியது. மய்யித் உன் பாத ரட்சையின் சப்தத்தையும் கூட கேட்கின்றது.

நூல் - ஷஹீஹுல் புகாரி
ஷஹீஹுல் முஸ்லிம்

நபி ஈஸா (அலை) அவர்கள் இஸ்லாமியப் போதனை செய்து வரும் போது இஸ்ரவேலர்கள் நூஹ் நபியின் மூத்த மகனான சாம் என்பவரை உயிர்ப்பித்துக் காட்ட வேண்டும் என்று கூறவும், ஸாம் அடங்கப்பட்ட மண்ணறை பக்கம் அனைவரும் கூடி நிற்க அல்லாஹ்விடம் ஈஸா (அலை) துஆ கேட்டார்கள். உடனே மண்ணறை இரண்டாகப் பிளந்திட ஸாம் அவர்கள் தலையிலுள்ள மண்ணை தட்டியவர்களாக வெளியே வந்து இஸ்ரவேலர்களைப் பார்த்து இவர்கள் அல்லாஹ்வின் தூதர் ஈசா (அலை) ஆவார்கள். இவர்களை நீங்கள் பின்பற்றினால் நேர்வழி பெறுவீர்கள் என்றுரைத்தார்கள்.

ஒரு சமயம் நபிமணி (ஸல்) அவர்கள் ஒரு மண்ணறையிலிருந்து (வேதனை செய்யப்படும்) சப்தத்தைக் கேட்டு இவர் எப்பொழுது மரணித்தார் என்று கேட்டபோது அதற்கு தோழர்கள் அறியாமை காலத்தில் என்று பதிலுரைத்தனர்.

அதனை கேட்ட நபிமணி (ஸல்) அவர்கள் மகிச்சியுறவும் நீங்கள் (மண்ணறையில் வேதனை செய்யப்படுவதைக் கண்டு இறந்தவர்களை) அடக்கம் செய்வதைக் கை விட்டு விடுவீர்களோ என்ற பயம் எனக்கு இல்லாதிருந்தால் நான் இறைவனிடம் துஆ கேட்டு (மண்ணறையிலிருந்து எழும் வேதனை சப்தத்தை நான். செவியுறும் வண்ணம் நீங்களும் மண்ணறை வேதனையைச் செவியுறச் செய்திருப்பேன் என்று நபிமணி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

*அறிவிப்பவர் - அனஸ் (ரலி)*
*நூல் - நஸாயீ*

ஒரு சமயம் நபிமணி (ஸல்) அவர்கள் பொழுதடையும்போது வெளியே புறப்பட்டார்கள். அப்பொழுது ஒரு (மண்ணறையில் வேதனை செய்யப்படும்) சப்தத்தைக் கேட்ட அவர்கள், 'யூதர்களுக்கு அவர்களுடைய மண்ணறையில் வேதனை செய்யப்படுகிறது' என்று நபிமணி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

*அறிவிப்பவர் - அபூ ஐயூப்*
*நூல் - புகாரீ முஸ்லிம் நஸாயீ*

## சூரத் இக்லாஸின் தூய்மை

நாங்கள் தபூக் போரில் ஈடுபட்டிருந்தபோது திடீரென கதிரவன் சுடர் மங்கலாகி விட்டது. அப்போது ஜிப்ரயீல் (அலை) தோற்றமளித்து முஆவியா பின் குர்ரா அவர்கள் மரணித்து விட்டார்கள். அவர் சூரத் இக்லாஸை தினமும் காலை மாலை ஓதி வருவதை வழக்கமாக்கிக் கொண்டவர். அதன் பொருட்டால் அவர் மரணித்ததும் அத்தோழருக்கு அமரர்கள் தொழுகை நடத்துவதால் அமரர்களின் இறக்கைகள் கதிரவனை மறைக்க கதிரொளி மங்கலாகிவிட்டது என்று ஜிப்ரயீல் (அலை) அவர்கள் கூறினார்கள்.

நிச்சயமாக உங்களில் இறைவன் இடத்தில் கண்ணியத்திற்குரியவர்கள் பக்தி ஒழுக்கமுள்ளவர்களே.

*அல்குர்ஆன் (49 - 13)*

ஒரு பெரியார், தனது மகன் மரணித்து மண்ணறையில் அடக்கப்பட்ட பின் அந்த மகன் நரகக் குழியில் வேதனை அடைந்தவராக இருப்பதைக் கனவில் கண்டு தந்தை மிகவும் துயரத்தில் ஆழ்ந்தார். மறுநாள் மகன் சுவர்க்கத்தில் இருப்பதை கனவின் மூலம் கண்ட தந்தை, 'மகனே! நீ நேற்று நரகக் குழியில் இருந்தாயே, ஆனால் இன்று நீ சுவர்க்கத்தில் இருப்பதென்ன?' என்று கேட்ட போது அதற்கு மகன், 'தந்தையே! நேற்று என் மண்ணறை அருகில் சென்று கொண்டிருந்த ஒருவர் குல்ஹுவல்லாஹு அஹது என்ற சூராவை மூன்று முறை ஒதி அதன் நன்மையை எங்களுக்கு அன்பளிப்புச் செய்தார். அதன் பலனாக நான் சுவர்க்கத்தில் இருக்க அனுமதிக்கப்பட்டேன்' என்று பெரியாரின் மகன் கூறினார்.

*நூல் - தஃப்ஸீருல் காஜின்*

மதீனாப் பள்ளிவாசலில் நபிமணி (ஸல்) அவர்கள் அமர்ந்திருந்த சமயம் ஒரு ஜனாஸா அவர்கள் முன்னிலையில் கொண்டுவரப்பட்டபோது அந்த ஜனாஸாவைப் பார்த்த நபிமணி (ஸல்) அவர்கள், 'இவர் யாருக்கும் கடன் பட்டிருக்கிறாரா?' என்று வினவியபோது, 'ஆம், இவர் ஒருவரிடம் கடன்பட்டிருக்கின்றார், அந்தக் கடனை கொடுக்காமலேயே மரணித்து விட்டார்' என்று விஷயம் அறிந்த நபிமணி (ஸல்) அவர்கள், 'கடனாளிக்காக நான் தொழ வைக்க மாட்டேன். உங்களில் எவரேனும் ஒருவர் தொழவையுங்கள்' என்று கூறினார்கள். அதே நேரத்தில்



பொருளடக்கம்

ஜிப்ரீல் (அலை) அவர்கள் தோன்றி நபிமணி (ஸல்) அவர்களை நோக்கி 'அல்லாஹ் உங்களுக்கு ஸலாம் கூறினான். அல்லாஹ்வின் கட்டளைப்படி நான் மனித உருவில் இவருடைய கடனைத் தீர்த்துவிட்டேன். ஆகையால் நீங்கள் இவருக்கு தொழ வைக்க வேண்டும் என்பதை அல்லாஹ் கட்டளையிடுகிறான்' என்று ஜிப்ரீல் (அலை) அவர்கள் சொன்னதைக் கேட்ட நபிமணி (ஸல்) அவர்கள், 'இவர் மீது அல்லாஹ் பிரியப்படக் கூடிய அளவிற்கு இவர் செய்த நன்மைதான் என்ன?' என்று கேட்டார்கள். அதற்கு ஜிப்ரீல் (அலை) அவர்கள், 'இவர் தினமும் நாள் ஒன்றுக்கு 100 முறை குல்ஹுவல்லாஹு அஹது என்ற சூராவை ஓதிவருபவராக இருந்தார். அதன் பலனாக இவர் இத்தகைய சிறப்பினை பெற்றார்' என்று கூறினார்கள்.

*நூல் - ஹதீதுல் அர்பஈன்*

கடன், பெருமை, மோசடி இம் மூன்றையும் விட்டு அப்பால் மரணித்தவர்கள் சுவர்க்கம் நுழைகின்றனர்.

*திருநபி (ஸல்)*

உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசும் நயவஞ்சகர்களே, அல்லாஹுத் தஆலா உங்களை விட்டும் இந்த பூமியை சுத்தப்படுத்துவானாக. ஆமீன். உங்களிடம் மலிந்து கிடக்கும் அழுக்காறும் (சாக்கடை) அசுத்தமும் போதாதென்று ஆலிம்களை, நேர்மையாளர்களை, பக்தர்களை, அவ்லியாக்களைப் பற்றியும் புறம் பேசுகிறீர்கள். உங்களுடையவும் உங்களைப் போன்ற நயவஞ்சகர் களுடையவும் நாவுகளும், தசைகளும் சீக்கிரமே மண்ணறையில் புழுக்களுக்கு இரையாகக் கூடியவை என்பதை உணர்ந்து கொள்ளுங்கள். சிதறடிக்கப்பட்டு



பொருளடக்கம்

பூமியால் நொறுக்கப்பட்டுப் போகக் கூடியவர்களாக இருக்கின்றீர்கள். அல்லாஹ்வின் விஷயத்தில் நல்லெண்ணமில்லாதவர்கள் ஒரு காலமும் ஈடேற்றம் அடைய முடியாது. அல்லாஹ்வுடைய நல்லடியார்களை மதித்து நடக்க ஏன் பின் வாங்குகிறீர்கள். அவர்களே சமூகத் தலைவர்களாக இருக்கின்றார்கள். திறப்பதையும், மூடுவதையும் இறைவன் அவர்களின் கரங்களிலே கொடுத்துள்ளான். அவர்களை முன்னிட்டு வானம் பொழிகிறது, பூமி விளைகிறது. அவர்கள் நிலை குலையாத மலைகள் போல் நிலைத்து எண்ணற்ற உள்ளங்களில் வாழ்ந்து வருகிறார்கள். ஆபத்துக்கள், சோதனைகள் என்ற புயல் சூராவளிகளால் அவர்கள் அசைக்கப்படுபவர்கள் அல்ல. தவ்ஹீத் நிலையிலிருந்து அவர்கள் கொஞ்சமேனும் தவறுவதில்லை. தங்களுக்கும், பிறருக்கும் இறைவன் பொருத்தம் வேண்டும் என்ற ஆசை மட்டும் அவர்களுக்கு உண்டு. உங்களுக்கு முன் இருந்தவர்கள் இறைவன் சமூகத்தால் ஒழுக்கத்துடனும், பயபக்தியுடனும் நின்றது போல் நீங்களும் நில்லுங்கள், உங்களுக்கு முன்னிருந்தவர்களுக்கு நீங்கள் இணையானவர்கள் அல்ல. அவர்களின் பக்தியும், சக்தியும் உங்களிடம் இல்லை. உங்களுடைய வீரமும் விவேகமும் இச்சையும் மறுமையை விட்டும் உலகத்திற்கே பயன்படுகிறது. அல்லாஹ் விதித்த நிபந்தனைகளை நிறைவேற்றுவதிலே உண்மையாகப் பயன்பட வேண்டும்.

மார்க்க ஞானம் படைத்த ஆலிம்களின் (தத்துவ ஞானிகளின்) அறிவுரைகளை அவமதிக்காதீர்கள். அவர்களின் அறிவுரைகள் இன்றியமையாத மருந்துகளாகும். அவாகளின் உபதேசங்கள் இறைவனின் வஹி என்னும் மரத்திலுதித்த கனிகளாகும்.



பொருளடக்கம்

உங்கள் உள்ளம் உலக இன்பத்தில் ஆழ்ந்திருக்க வெளிக்கு மட்டும் அவற்றை துறந்தவர்களாக நடிப்பதில் என்ன பலன்? உள்ளங்களில் உள்ளதை எல்லாம் அல்லாஹ் அறிவான் என்பதை நீங்கள் அறியவில்லையா? நாவால் அல்லாஹ்வின் மீது நம்பிக்கை வைத்திருப்பதாகக் கூறிக் கொண்டு, உள்ளத்தில் அல்லாஹ அல்லாத பொருளுக்கு இடமளிப்பதில் உங்களுக்கு வெட்கமில்லையா? அல்லாஹ்வின் கருணையை கண்டு ஏமாந்து விடாதீர்கள் (விட்டுக் கொடுத்து) பின்னால் அவன் பிடி வந்துவிட்டால் அது மகா கொடியதாக இருக்கும் என்பதை மறந்து விடாதீர்கள். மெய்ப்பொருள் பற்றிய ஞானமில்லாதவர்கள் பேச்சில் மயங்கி ஏமாந்து விடாதீர்கள். ஏனென்றால் அவர்கள் கற்ற கல்வி முழுவதும் அவர்களுக்கு தீமைகள் தான் விளைவிக்கும். அவர்கள் அல்லாஹ்வின் ஏவல்களை அறிந்திருந்தாலும், அல்லாஹ்வை அறியாதவர்களாக இருக்கிறார்கள். அவர்கள் சொல் ஒன்று செயல் ஒன்று. நல்லார்கள் வகுத்த வழியில் அவர்கள் நடப்பதில்லை. இருட்டு வேளையில் விறகு பொறுக்குபவர்கள் போல் நீங்களும் ஆகிவிடாதீர்கள்.

கஃதுல் அஃலம்

## மாநபி (ஸல்) அவர்களின் மனக்கவலை

ஒரு சமயம் ஜிபுரயீல் (அலை) அவர்கள் நபிமணி (ஸல்) அவர்களிடம் வந்தார்கள். அப்பொழுது நபிமணி (ஸல) அவர்கள் மிகவும் கவலை அடைந்தவர்களாக இருக்கக் கண்டு 'தங்களுக்கு அல்லாஹ் சலாம் கூறினான். தாங்கள் மிகவும் துன்புறும் நிலையில் இருப்பதின் காரணத்தைத் தெரிந்து வரும்படி கூறினான்' என்று கூறினார்கள். நபிமணி (ஸல்) அவர்கள் நாளை கியாமத் நாளில் என் உம்மத்தவர்களின்



பொருளடக்கம்

நிலை என்னவாகுமோ? என்பதை எண்ணிக் கவலை அடைகிறேன் என்று கூறினார்கள். பனூஸலாமா கூட்டத்தார் அடக்கம் செய்யப்பட்டிருக்கும் மண்ணறையின் பக்கம் ஜிப்ரீல் அவர்கள் நபிமணி (ஸல்) அவர்களை அழைத்துச் சென்றார்கள். ஒரு மண்ணறை அருகில் சென்று தமது இறகு ஒன்றை அடித்து கும்பி இதினில்லாஹ் அல்லாஹ்வின் உத்தரவைக் கொண்டு எழுந்திருப்பாயாக என்று கூறவும். அழகான முகத் தோற்றத் தில் ஒரு உருவம் லாயிலாஹ இல்லல்லாஹ் முஹம்மதுர் ரசூலில்லாஹி, அல்ஹம்து லில்லாஹி ரப்பில் ஆலமீன் என்று கூறியவராக எழுந்து வெளியே வந்தார். உம்முடைய இடத்துக்கு திரும்பிச் செல்வீராக என்று ஜிப்ரீல் (அலை) கூறிவிடவும் அவர் திரும்பி சென்று விட்டார்.

மற்றொரு மண்ணறையின் பக்கம் சென்று இரண்டாவது சிறகை அடித்து அல்லாஹ்வின் உத்தரவால் எழுந்திருப்பாயாக என்று ஜிப்ரீல் (அலை) அவர்கள் கூறிவிடவும் அதிலிருந்து கருத்த முகமும் குழி விழுந்த கண்களுமுடைய அவலட்சணமான ஒருவன் அந்தோ வெட்கக்கேடே! துன்பமே! துயரமே! என்று அழுது கொண்டே எழுந்து வந்தான், ஜிப்ரீல் (அலை) உனது இருப்பிடம் செல்வாயாக என்று கூறவும் அவன் திரும்பிச் சென்று விட்டான்.

(அல்ஹதீஸ்)

## மண்ணறையில் அபூஜஹல்

நாங்கள் ஒரு தினம் பதுரு மைதானம் பக்கம் வந்து கொண்டிருந்தோம்.

ஒரு மனிதன் மண்ணுக்குள்ளே இருந்து வெளிப்பட்டு வந்தான். அவனுடைய கழுத்து இரும்புச் சங்கிலியால்

பிணைக்கப்பட்டிருந்தது. அதனுடைய இன்னொரு நுனியை கருநாகப் பாம்பு வாயால் கவ்விக் கொண்டிருந்தது. என்னைப் பார்த்த அம்மனிதன், 'அப்துல்லாஹ் கொஞ்சம் தண்ணீர் கொடுங்கள்' என்று கேட்டான். அவன் எனது பெயரைச் சொன்னானா? அல்லாஹ்வின் அடியான் என்ற கருத்தில் சொன்னானா? என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. அந்த கருநாகப் பாம்பு என்னை நோக்கி இந்த மனிதனுக்கு தண்ணீர் கொடுக்காதீர், இவன் காபிர்!' என்று கூறியது. அதற்குப் பிறகு அந்தப் பாம்பு அந்த மனிதனை மண்ணுக்குள்ளே இழுத்துச் சென்றது.

மண்ணுக்குள்ளே அவனும் நுழைந்து விட்டான். இந்த சம்பவத்தை நபிமணி (ஸல்) அவர்களிடம் சொன்ன போது உண்மையாக அந்த மனிதனைப் பார்த்தீரா? அந்த மனிதன் இறைவன் விரோதி அபூஜஹலு பின் ஹிஸாம் ஆகும். அவனுக்கு மண்ணறை வேதனை கியாம நாள் வரைக்கும் இருக்கும் என்று நபிமணி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

*அறிவிப்பவர் - அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி)*
*நூல் - தக்கிரது குர்துபா*

## மண்ணறை விளக்கம்

ஒரு தடவை ஹஜ்ரத் உமர் இப்னு அப்துல் அஜீஸ் (ரஹ்) அவர்கள் ஒரு ஜனாஸாவுடன் சென்றார்கள். கப்ருஸ்தான் சென்றடைந்த பின்னர் தனிமையில் உட்கார்ந்து ஏதோ ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கி விட்டார்கள். ஒருவர் அமீருல் முஃமினீன் அவர்களே, தாங்கள் இந்த ஜனாஸாவுடைய வலீ (பொறுப்புதாரீ) ஆவீர்கள். தாங்களே இப்படி ஒதுங்கி அமர்ந்து கொண்டீர்களே எனக் கேட்க, அதற்கு அவர்கள்



பொருளடக்கம்

'ஆம்! என்னை ஒரு கப்ரு அழைத்துக் கீழ்காணுமாறு கூறுகிறது, 'உமர் இப்னு அப்துல் அஜீஸ் அவர்களே! என் சொல்லைக் கேட்க மாட்டீரா?' என்றது. அதற்கு, 'நான் சொல்வாயாக!' என்றேன். அதற்கு அது 'நான் அவர்களின் கபன் துணிகளைக் கிழித்து விடுகிறேன், உடலைத் துண்டு துண்டாக்கி விடுகிறேன், இரத்தம் முழுவதையும் உறிஞ்சி விடுகிறேன், மாமிசத்தை சாப்பிட்டு விடுகிறேன், மனிதனின் மூட்டுகளுடன் என்ன செய்கிறேன் என்று சொல்லட்டுமா? தோளிலிருந்து கைகளைப் பிரித்து விடுகிறேன், கைகளை மணிக்கட்டிலிருந்து பிரித்து விடுகிறேன், உடலிலிருந்து பித்தட்டை உரித்து விடுகின்றேன், பித்தட்டிலிருந்து தொடையைப் பிரித்து விடுகின்றேன், தொடையிலிருந்து முழங்கால்களையும், முழங்கால்களிலிருந்து கரண்டைக் கால்களையும், கரண்டைக் கால்களிலிருந்து பாதங்களையும், தனித்தனியாகப் பிரித்து விடுகிறேன்' என்றது. இவ்வாறு கூறியவர்களாக ஹஜ்ரத் உமர் இப்னு அப்துல் அஜீஸ் (ரஹ்) அவர்கள் அழத் தொடங்கினார்கள்.

மேலும் கூறலானார்கள், உலகில் தங்குவதோ மிகவும் சொற்பமானது, ஆனால் இதனுடைய ஏமாற்றமோ மிகவும் அதிகமானது. இங்கு கண்ணியத்திற்குரியவன் மறுமையில் கேவலமடைவான். இங்கு செல்வத்தையுடையவன் மறுமையில் ஏழையாவான், இங்குள்ள வாலிபன் வெகு சீக்கிரம் வயோதிகம் அடைவான். இங்குள்ள உயிருள்ளவன் வெகு சீக்கிரம் இறந்து போவான். உங்கள் பக்கம் இதன் முன்னோக்குதல் உங்களை ஏமாற்றத்தில் போட்டுவிடக் கூடாது. எனினும் இது எவ்வளவு சீக்கிரம் முகம் திருப்பிக் கொள்கிறது என்பதை பார்க்கத்தான் செய்கிறீர்கள். இதன்

ஏமாற்றத்தில் சிக்கிக் கொள்பவனே முட்டாள் ஆவான். இதன் மீது மனதைப் பறிகொடுத்து பெரும் பெரும் நகரங்களை நிறுவி பெரும் பெரும் ஓடைகளை வெட்டி ஒலித்தோடச் செய்து பெரும் பெரும் தோட்டந்துரவுகளை உருவாக்கிய அத்தகையவர்கள் எல்லோரும் எங்கே சென்றார்கள். மிகச் சொற்ப நாட்களே இருந்து விட்டு அனைத்தையும் இங்கேயே விட்டு விட்டுச் சென்று விட்டார்கள். அவர்கள் தமது ஆரோக்கியத்தையும் உடல் பலத்தையும் நம்பி ஏமாந்து போனார்கள். ஏனெனில் ஆரோக்கியமாக இருந்ததால் அவர்களுக்குப் போதை பிறந்து அதனால் பாவங்களில் ஈடுபட்டு விட்டார்கள். இறைவன் மீது ஆணையாக அம்மக்கள் செல்வப் பெருக்கத்தின் காரணமாகப் பொறாமைப் படத்தக்கவர்களாக இருந்தனர். அச்செல்வத்தைச் சம்பாதிப்பதில் அவர்களுக்குப் பல தடைகளும் குறுக்கீடுகளும் உண்டாயின. இருப்பினும் நிறைய சம்பாதித்துக் கொண்டே இருந்தார்கள். ஜனங்கள் அவர்கள் மீது பொறாமைப் பட்டுக் கொண்டிருந்தார்கள். ஆனால் அவர்களோ கவலையற்று செல்வத்தைச் சேமிப்பதிலேயே கவனமாக இருந்தார்கள். மேலும் அதனைச் சேமிப்பதில் எற்பட்ட எல்லாவிதமான தடங்கல்களையும் சந்தோஷமாக சகித்துக் கொண்டிருந்தார்கள். ஆனால் இப்பொழுது மண் அவர்களின் உடல் அங்கங்களை என்ன நிலைமைக்கு ஆளாக்கி இருக்கின்றது. புழுதி அவர்களின் மேனிகளை என்னவாக ஆக்கிவிட்டது. புழுக்கள் அவர்களுடைய மூட்டுக்களையும், எலும்புகளையும் என்ன நிலையாக ஆக்கியுள்ளன என்பதைப் பார்த்துக் கொள்ளுங்கள்.

அவர்கள் உலகில் மிக உயரமான மஞ்சத்தின் மீதும், மிருதுவான பஞ்சணைகளின் மீதும், வேலையாட்கள், ஏவலர்கள் புடை சூழப் படுத்து உறங்கிக் கொண்டிருந்தார்கள். உறவினர்களும், உற்ற நண்பர்களும், அண்டை வீட்டாரும் எந்நேரமும் மகிழ்வூட்டத் தயாராக இருந்தார்கள். ஆனால் இப்பொழுது அவர்களை அழைத்து என்ன நடைபெறுகிறது? என்று விசாரித்துப் பாருங்கள். ஏழை பணக்காரர் அனைவரும் ஒரே மைதானத்தில் படுத்துக் கிடக்கின்றனர். இவர்களில் உள்ள பணக்காரர்களிடம் அவர்களின் செல்வம் என்ன பயன் அளித்தது? எனக் கேட்டுப் பாருங்கள். இவர்களில் உள்ள ஏழைகளிடம் அவர்களுடைய ஏழ்மை என்ன நஷ்டத்தை ஏற்படுத்தியது எனக் கேட் டுப் பாருங்கள். மிக அதிகமாகப் பேசிக் கொண்டிருந்த அவர்களின் நாவுகளின் நிலை என்னவாயிற்று எனக் கேளுங்கள். எல்லாத் திசைகளிலும் பார்த்துக் கொண்டிருந்த அவர்களின் கண்களைப் பாருங்கள். அவர்களின் மெல்லிய மிருதுவான தோலின் நிலை என்னவாயிற்று? என விசாரியுங்கள். அவர்களின் மனங்கவரும் அழகுவதனங்களின் கதி என்னவாயிற்று? அவர்களின் மிருதுவான மேனி எங்கு போனது? புழுக்கள் அவை அனைத்தையும் என்ன கதிக்கு ஆளாக்கிவிட்டன. அவர்களின் நிறத்தைக் கருக வைத்துவிட்டன.

அவர்களின் சதையை மண் அரித்து விட்டது, அவர்களின் முகத்தின் மீது மண் விழுந்து விட்டது. உறுப்புகளைத் தனித்தனியாகப் பிரித்து விட்டது. மூட்டுகளை முறித்து விட்டது. இதோ வந்து விட்டேன் எனக் கூறி எந்நேரமும் கைகட்டிக் காத்து கிடந்த அவர்களின்

பணியாட்கள் எங்கே? அவர்கள் சுகமாக ஓய்வெடுத்துக் கொண்டிருந்த கூடாரங்களும், அறைகளும் எங்கே? அடுக்கடுக்காக வைக்கப்பட்டிருந்த அவர்களின் செல்வங்களும், கஜானாக்களும் எங்கே? அந்தப் பணியாட்கள் அவர்களுக்கு கப்ரில் உண்பதற்காக எந்தக் கட்டுச் சாதமும் கட்டித் தரவில்லை. மேலும் அவர்களுடைய கப்ரில் எந்த விரிப்பையும் விரிக்கவில்லை. ஒரு தலையணையைக் கூட வைக்கவில்லை. மண்ணின் மீதே படுக்க வைத்து விட்டனர். மரமோ, மலரோ, மலர்ச்செண்டோ எதையும் வைக்கவில்லை. அந்தோ பரிதாபம், இப்பொழுது அவர்கள் அப்படியே படுத்துக் கிடக்கின்றனர். இருட்டில் விழுந்து கிடக்கின்றனர். இப்பொழுது அவர்களுக்கு இரவும் பகலும் எல்லாம் சமமே, நண்பர்களைச் சந்திக்க முடியாது. யாரையும் தன்னருகில் அழைக்க இயலாது. எத்தனையோ மிருதுவான உடலையுடைய ஆண்களும், எத்தனையோ மிருதுவான மேனியுடைய பெண்களும், இன்று அவர்களின் உடல்கள் மக்கி மண்ணோடு மண்ணாகிக் கிடக்கின்றன.

அவர்களின் உடல் உறுப்புகள் ஒன்றை விட்டு மற்றொன்று பிரிந்து கிடக்கின்றன. கண்கள் வெளிப்பட்டு முகத்தில் விழுந்து விட்டன. கழுத்து வேறாக கிடக்கிறது. வாயில் சீழும், சலமும் நிறைந்து கிடக்கிறது. உடல் முழுவதும் புழுக்கள் நெளிந்து கொண்டிருக்கின்றன. அவர்களோ அந்நிலையில் கிடக்கின்றனர். ஆனால் அவர்களின் மனைவியரோ மறுமணம் புரிந்து சுகம் அனுபவித்துக் கொண்டிருக்கின்றனர். மக்கள் வீட்டைக் கைப்பற்றிக் கொண்டனர். அனந்தரக்காரர்கள் சொத்தைக் கைப்பற்றிக் கொண்டனர்.

ஆனால், சில பாக்கியசாலிகள் இவ்வாறும் உள்ளனர். அவர்கள் தமது கப்ருகளிலும் ஆனந்தமாக இருக்கின்றனர். செழிப்பான மலர்ந்த முகங்களுடன் நிம்மதியாகவும், சுகமாகவும் இருக்கின்றனர். (ஆனால் அவர்கள் யாரென்றால் இந்த ஏமாற்றும் வீட்டிலும் அந்த மறுமையின் வீட்டை ஞாபகம் வைத்திருந்தவர்கள். இதன் ஆசைகளை விட மறுமையின் ஆசைகளுக்கே முதலிடம் அளித்தவர்கள். அதற்கான கட்டுச் சாத் த்தையும் தயாரித்துக் கொண்டவர்கள். தாம் சென்றடைவதற்கு முன்பாகவே பிரயாணத்திற்குத் தேவையான சாமான்களைத் தயாரித்துக் கொண்டவர்கள்.)

## நாளை கப்ருக்கு நிச்சயம் போகவிருக்கும் மனிதனே!

இவ்வுலகத்தின் எந்த விஷயம் உன்னை ஏமாற்றத்தில் போட்டு வை த்திருக்கிறது? இந்தக் கேடுகெட்ட உலகம் உன்னுடன் எப்பொழுதும் இருக்கும் என்று நம்பிக் கொண்டிருக்கிறாயா? நீ இந்த விடுதி போன்ற வீட்டில் நிலையாக இருப்பாய் என்றா நம்பி இருக்கிறாய்? உன்னுடைய இந்தப் பெரிய வீடு உன்னுடைய தோப்பில் பழுத்த கனிகள், உனது மிருதுவான படுக்கை, உனது வெயிலுக்கும், குளிருக்கும் பொருத்தமான ஆடைகள். இவை அனைத்தும் அப்படியே இருந்து விடும்., மலக்கல் மவுத் வந்து பிடித்துக் கொண்டால் பிறகு எப்பொருளும் அவரிடமிருந்து உன்னைப் பிரித்து விட முடியாது. அப்பொழுது வேர்வைக்கு மேல் வேர்வை வர ஆரம்பித்து விடும், தாகம் கடுமையாக அ திக ரித்து விடும். உயிர் போகும் வேதனையில் துவண்டு புரண்டு கொண்டிருப்பாய். பரிதாபத்திலும் அதிக பரிதாபத்திற்குரிய மனிதனே! நீ இன்று மரணித்துக்



பொருளடக்கம்

கொண்டிருக்கும் உனது சகோதரனின் கண்களை மூடுகிறாய். உனது தந்தையின் கண்களை மூடுகிறாய். அவர்களில் சிலரை குளிப்பாட்டவும் செய்கிறாய். சிலருடைய ஜனாஸாவுடனும் செல்கிறாய். சிலரை கப்ரு குழியில் இறக்கவுஞ் செய்கிறாய். நாளை உனக்கும் இந்த கதி ஏற்படுமல்லவா?

இதைப் போன்ற இன்னும் பல விஷயங்களைக் கூறி விட்டு பிறகு இரண்டு கவிதைகளை படித்தார்கள். அவைகளின் பொருளாவது - 'வெகு விரைவில் அழிந்து போகக் கூடிய பொருள்களைக் கொண்டு மனிதன் மகிழ்வடைகிறான். நீண்ட நீண்ட விருப்பங்களிலும், உலக ஆசைகளிலும் திளைத்திருக்கின்றான். அறிவிலியே! கனவில் காணும் இன்பத்தால் ஏமாற்றத்தில் விழுந்து விடாதே. உனது பகல் முழுவதும் மறதியில் கழிகிறது. உனது இரவு முழுவதும் உறக்கத்தில் கழிகிறது. ஆனால் மரணமோ உன் மீது அமர்ந்திருக்கிறது. நாளைக்கு உனக்கு கை சேதம் தரும் வேலைகளை இன்று செய்து கொண்டிருக்கிறாய். நீ வாழ்வது போல் தான் மிருகங்களும் உலகில் வாழ்வைக் கழித்துக் கொண்டிருக்கின்றன.

இச்சம்பவத்திற்குப் பிறகு ஒரு வாரம் கூட கழிந்திருக்காது. ஹஜ்ரத் உமர் இப்னு அப்துல் அஜீஸ் (ரஹ்) அவர்கள் காலஞ் சென்று விட்டார்கள் என்று சொல்லப்படுகிறது.

*(மஸாமராதீ)*

## தற்கொலை செய்வதன் நிலை என்ன?

ஒரு சமயம் கூபா நகரில் அகழி தோண்டிக் கொண்டிருக்கும் போது அந்த நிலத்தில் அடக்கம் செய்யப்பட்ட மண்ணறை வாசிகளின் சடலங்களை அவரவர்களுடைய சொந்தக்காரர்கள் எடுத்து வெவ்வேறு

நிலங்களில் அடக்கம் செய்தனர். அந்த மண்ணறை வாசிகளில் ஒரு இளைஞனின் சடலமும் பார்வைக்குத் தென்பட்டது. அவன் தன் கைகளாலேயே தனது கையை வெட்டிக் கொண்டிருந்த நிலையில் இருந்தான்.

*நூல் - இப்னு அபித்துன்யா*
*அறிவிப்பவர் - கலீபா அபூ ஜஃபர் மன்சூர் (ரஹ்)*
*அவர்கள் தந்தை மூலம் அறிவித்தார்கள்.*

விளக்கம் - தன் கையையே வெட்டிக் கொண்டிருந்தவன் தன்னுடைய இரு கைகளையும் துண்டித்த நிலையில் தற்கொலை செய்தவன் ஆவான். அவன் மரணித்த பின்னும் தனது கைகளை வெட்டிக் கொண்டேயிருக்கும் நிலையில் ஆக்கப்பட்டிந்தான்.

எந்த செயலின் மூலம் ஒருவன் தற்கொலை செய்கின்றானோ அவன் மரணித்த பின்னும் அந்தச் செயலையே செய்து கொண்டிருப்பான்.

*திருநபி (ஸல்)*

## ஒரு மண்ணறையில் கேட்ட குரல்

ஒரு சமயம் ஹஜ்ரத் உமர் (ரலி) அவர்கள் தனது தோழர்களுடன் ஒரு பயணத்தை மேற்கொண்ட போது ஒரு மண்ணறை அருகே சென்று தோழர்களுடன் ஜியாரத் செய்த பின் தங்களின் தோழர்களை நோக்கி, ‘உலகத்தில் யார் இறைவனுக்குப் பயந்து வாழ்க்கை நடத்துகிறாரோ அவருக்கு மறுமையில் இருவிதமான தோட்டங்கள் வழங்கப்படுகின்றன’ என்று கூறியதுமே அந்த மண்ணறையிலிருந்து ஒரு குரல், ‘கலீபா அவர்களே! தாங்கள் கூறியது போல நான் இறைவனுக்குப் பயந்து வாழ்ந்து வந்தேன். எனக்கு



பொருளடக்கம்

இருவிதமான தோட்டங்கள் வழங்கப்பட்டுள்ளன' என்று சப்தம் கேட்டது.

ஒரு சமயம் ஆயிஷா (ரலி) அவர்களின் இல்லத்திற்கு ஒரு பெண்மணி வந்தார். அந்தப் பெண்மணி தன்னுடைய கரத்தை மறைத்தவராக நின்றபோது, 'கரத்தை மறைவாக வைத்திருப்பது ஏன்?' என்று ஆயிஷா (ரலி) அவ்ர்கள் வினவியபோது, 'அன்னை அவர்களே, என் தந்தை மிகவும் இரக்க சிந்தனையுடையுவர். தருமம் செய்வதிலும் தயாள குணமுள்ளவர். அவர் தருமம் செய்தால் என் தாய் தடுத்து விடுவார். இவர்கள் இருவரும் இறந்த பின் அவர்களை நான் ஒரு நாள் கனவில் பார்த்தேன். என் தந்தை மிகவும் சந்தோஷத்துடன் கியாம நாளில் தாகமுடையவர்களுக்கு தண்ணீர் கொடுத்து கொண்டிருக்கிறார். ஆனால் என் தாய் மிகவும் தாகமுடையவராக ஏங்கித் தவித்துக் கொண்டிருக்கிறார். அவருக்குத் தண்ணீர் கிடைக்கவில்லை. இதைப் பார்த்துக் கொண்டிருந்த நான் ஒரு சொம்பில் தண்ணீர் எடுத்து என்னுடைய தாயாருக்குக் கொடுத்த போது 'அந்தப் பெண்ணுக்கு தண்ணீர் கொடுப்பவரின் கை நலிந்து செயலற்று போகட்டும்' என்ற குரல் கேட்டபோது நான் திடுக்கிட்டேன். உடனே கண் விழித்தபோது என் கரம் நலிந்து செயலற்றதாகிவிட்டது என்று அந்தப் பெண்மணி கூறி ஆயிஷா (ரலி) அவர்களிடம் கரத்தைக் காட்டினார்.

*நூல் - தப்ஸீருல் குர்ஆன் மஜீத்*

## மண்ணறையில் ஒரு மிருகம்

இப்பானுல் ழுஜ்லி என்னும் ஒரு பெரியார் பின்வருமாறு கூறியதைப் படியுங்கள். எங்களுடைய



பொருளடக்கம்

இல்லத்திற்கு அடுத்த இல்லத்தில் வசித்த ஒருவர் மரணித்த போது அவரைக் குளிப்பாட்டி மண்ணறைக்கு எடுத்துச் சென்றோம். மண்ணறையில் ஒரு கரும் பூனை போன்று ஒரு மிருகம் இருப்பதைப் பார்த்த நாங்கள் அதை விரட்டினோம். அது அசையாமல் இருந்தது. மற்றொரு மண்ணறையை தோண்டியபோது மீண்டும் அந்த மிருகம் அந்த மண்ணறையிலும் அமர்ந்திருக்கக் கண்டு அதை விரட்டினோம். அது அசைவதாக இல்லை. அவருக்காக சாட்டப்பட்ட மிருகம்தான் அது என்று அறிந்து அந்த மண்ணறையிலேயே அவரை அடக்கம் செய்த நொடிப் பொழுதில் எலும்பை முறிக்கின்ற முழக்கம் கேட்டது. கூடியிருந்த நாங்கள வேதனையடைந்த நிலையில் இவர் என்ன பாவம் செய்தாரோ என்ற சிந்தனையில் ஆழ்ந்து அவருடைய மனைவியிடம் விளக்கம் கேட்க, விதிக்கப்பட்ட குளிப்பை காலங்கடத்தி அதாவது சூரியன் உதித்த பிறகுதான் குளிப்பார் என்ற சேதியை அறிந்து கொண்டோம்.

## எம்பெருமான் எச்சரிக்கை

கட்டாயக் கடமையான முழுக்குடன் இருக்கும் நிலையில் சூரியன் உதயமாவதற்கு முன் குளித்து விடவும். என்னை நபியாக அனுப்பியவன் மீது ஆணையாக எவர் ஒருவர் கட்டாயக் கடமையான குளிப்பைக் குளித்து விட்டு பஜ்ர் தொழுகையை இமாம் ஜமாஅத்துடன் தொழுவானாகில் சொர்க்கத்தில் நானும் அவரும் (இரு விரலை நெருக்கிக் காட்டி) இவ்வாறு இருப்போம் என்று திருநபி (ஸல்) அவர்கள் திருவுளமானார்கள்.



பொருளடக்கம்

# அற்புதம் நடந்த உண்மைச் சம்பவங்கள்

## ஒரு மையித்திற்கு பூமி இடம் தர மறுத்துவிட்டது

சில தினங்களுக்கு முன் ராவல் பிண்டியில் பீர்தோஹாயி என்னும் கிராமத்தின் பழைய கபுருஸ்தானில் நிகழ்ந்த அறிவையே ஆச்சரியத்தில் ஆழ்த்தும் மறுக்க முடியாத அந்த நிகழ்ச்சி. மய்யித்தை அடக்க வந்த ஆயிரக்கணக்கான பேர்களை நடுநடுங்கச் செய்து கண் கலங்கச் செய்து விட்டது. அழியாத அடையாள த்தை அவர்களது உள்ளங்களில் பதிய செய்து விட்டது. அனைவரும் தமது நிலையாதாகுமோ எனக் கவலைப்பட ஆரம்பித்து விட்டனர். பீர்தோஹாயி கிராமத்தில் ஒரு முஸ்லிம் இறந்து விட்டார். உறவினர்கள் அந்த மய்யித்தை குளிப்பாட்டி கபனிட்டு ஜனாஸா தொழ வைத்த பின் கபுருஸ்தானுக்கு கொண்டு வந்தனர். தோண்டப்பட்ட கப்ருக்கருகில் மைய்யித்தை இறக்கினர். மைய்யித்தைத் தூக்கி கப்ரில் இறக்க முனைந்தபோது கண்மூடி கண் திறப்பதற்குள் கப்ரு ஒன்றாக மூடிக் கொண்டது. இந்த அபூர்வ காட்சியை மக்கள் கண்டு திகைப்படைந்தனர். கண்ணால் கண்டவர்களில் முஹம்மத் நாஸிர் என்பவர் ஜங் பத்திரிகை நிருபர். இவர் அந்நிகழ்வை வியப்போடு கூறுகிறார். அங்கு வருகை தந்திருந்த அனைவைரயும் இந்த நிகழ்ச்சி திகிலடையச் செய்து விட்டது. ஒன்றுமே புரியாமல் திகைத்து நின்றனர். அந்த கூட்டத்திலிருந்து ஒரு மார்க்க மேதை ஆலிமின் வேண்டுகோளின்படி வேறொரு கப்ர் தோண்டப்பட்டது. அதில் மைய்யித்தை தூக்கி வைக்க முனைந்த போது அந்த கப்ரும் இணைந்து கொண்டது.



பொருளடக்கம்

மக்கள் மீண்டும் பெரும் திகலுக்குள் ஆழ்ந்தனர். ஆலிம் சாஹிப் கூறிய படி எல்லோரும் அஸ்தபிருல்லாஹ் என்று ஓதி இறைவனிடம் பாவ மன்னிப்புக் கோரினர். ஆலிம் சாஹிப் உத்தரவு பிரகாரம் மூன்றாம் முறைய கப்ரு தோண்டப்பட்டது. அந்த கப்ருக்குள் கரு நாகங்களும், தேள்களும் தோன்றிய பயங்கரமான காட்சியை மக்கள் கண்ணுற்றனர். ஆலிம் சாஹிப் சொல்லியபடி மைய்யித் கப்ருக்குள் போடப்பட்டதும் ஒரு நாகம் மைய்யித்தை இடுப்பிலிருந்து கழுத்து வரை சுற்றிக் கொண்டது. இன்னொரு நாகமும் சேர்ந்து மைய்யித்தை இறுக்கின. ரம்பத்தால் அறுத்தது போல மய்யித் இரு துண்டுகளாகப் பிளந்து கொண்டது. உள்ளத்தை உலுக்கும் இந்த அபூர்வ பயங்கரக் கோரக் காட்சியை கண்டு மக்கள் கதி கலங்கினர். கப்ரில் மண்ணைத் தள்ளிவிட்டு கபுருஸ்தானிலிருந்து திரும்பியதும் ஆலிம் சாஹிப் உருக்கமாக கப்ரில் நடக்கும் நிகழ்ச்சிகளை குர்ஆன் ஹதீஸ் ஆதாரத்தோடு எடுத்துரைத்தார். மக்கள் கண் கலங்கினர். கப்ரில் நடக்கும் உண்மைகளை நம்புகிறோம். இனி மார்க்கத்திற்கு முரணாக நடக்க மாட்டோம் என்று உறுதி கூறி சபதம் எடுத்துக் கொண்டு திரும்பினர்.

*23.11.91 ஜங்க் உருது தினசரி (கராச்சி)*

*நன்றி - முஸ்லிம் முரசு*

## மண்டை ஓடுகளின் மர்மங்கள்

ஒரு இறைநேசர் தம் சீடர்களுடன் ஒரு பயணத்தை மேற்கொண்டபோது வழியில் கப்ருஸ்தான் தென்படவே அதன் பக்கம் நெருங்கினார். அங்கே கிடந்த மூன்று மண்டை ஓடுகளை கண்டதும் அவைகளில் ஒன்றை எடுத்து அதன் காது பக்கமாக ஒரு குச்சியை நுழைத்தார். அந்த குச்சி ஒரு

காதின் வழியாக நுழைந்து மறுகாதின் வழியாக வெளியே வந்தது. அதை வீசி எறிந்தார். மற்றொரு மண்டை ஓட்டை எடுத்து காது பக்கமாக குச்சியை நுழைத்தார். அந்த குச்சி முழுமையாக நுழையாமல் நடுமத்தியிலேயே நின்று விட அதையும் முன்போல் வீசி எறிந்தார். மீண்டும் மூன்றாவது மண்டை ஓட்டை எடுத்து அதன் காதில் குச்சியை நுழைத்தார். அது நடுமத்திவரை வந்து தொண்டை வழியாக வெளியே வந்ததை கண்டதும், இறை நேசரின் முகம் கதிரவனைக் கண்ட கமலம் போல் மலரவும் இதழ்கள் இரண்டும் விரிய புன்னகைப் பூத்தன. இறைநேசரின் செயல்களை கவனித்து வந்த சீடர்களில் ஒருவர் விளக்கம் கேட்ட போது, இறைநேசர் கூறியதாவது. முதல் மண்டை ஓடு மனிதன் ஒரு உபதேசம் கேட்டால் அதை ஒரு காதில் வாங்கி மறு காதில் வெளியேற்றி விட்டுவிடுவான். இவன் முட்டாள். இரண்டாவது மண்டையோடு மனிதன் ஒரு உபதேசம் கேட்டால் காதின் நடுமத்தியோடு வாங்காமல் எண்ணங்களை உலகின் பால் திருப்பி விடுவான். இவன் முழு முட்டாள். மூன்றாவது மண்டையோடு மனிதன் ஒரு உபதேசத்தைக் கேட்டதுமே காதில் வாங்கி இதயத்தில் பதிய வைப்பான். செயலிலும் ஈடுபடுவான். இவன் அறிவாளி என்றார்.

## மண்ணறையில் ஒரு பாவியானவன்

நான்காவது கலிபா அலி (ரலி) அவர்கள் ஆட்சி காலத்தில் ஒரு பாவியானவன் இறந்து விட்டான். அவனை மண்ணறையில் அடக்கமும் செய்தாகி விட்டது. இந்த செய்தி அவனுடைய தாயார் காதில் எட்டியது. உடனே அலி (ரலி) அவர்களிடம் வந்து என் மகனின் முகத்தை நான் காண

வேண்டும். மண்ணறையைத் தோண்டி என் மகனைக் காட்டுங்கள் என்று கண்ணீர் சிந்தியவாறு வினவியபோது அலி (ரலி) அவர்கள் மண்ணறையைத் தோண்ட மறுத்துவிட்டார்கள். இதனைக் கேட்ட தாயாரின் உள்ளம் தாளாமல் மகன் முகத்தைப் பார்ப்பதற்கு ஆவல் கொண்டு பாசம் மீறி ஆவேசம் கொர்ண்டவராக என் மகன் முகத்தை நீங்கள் காட்டித் தராவிட்டால் நான் இந்த இடத்திலேயே என் உயிரை மாய்த்துக் கொள்வேன் என்று கூறிய வார்த்தையைக் கேட்டதுமே உடனே அந்த மண்ணறை பக்கம் சென்று அலி (ரலி( அவர்கள் உத்தரவின் படி முகத்தளவு மட்டும் மண்ணறை தோண்டப்பட்டது. சுபுஹானல்லாஹ், பாவியான அந்த மைய்யித்தின் விழிகள் ஒளி பிரகாசித்தது, அனைவரையும் ஆச்சரியத்தில் ஆழ்த்தியது. அவனது தாயாரும் ஆனந்தத்தில் மூழ்கி மனம் பூரித்தார். அலி (ரலி) அவர்கள் சிந்தனையில் ஆழ்ந்தபோது 'மரணித்ததவன் ஒரு பாவிதான். ஆனால் தவறு செய்யும் போதெல்லாம் அவன் அடிக்கடி பாவமன்னிப்பு கேட்டுக் கொண்டேயிருப்பான். அதனால் அல்லாஹ் இந்த உயர்ந்த பதவியை அளித்தான்' என்று கூறிச் சென்றார்கள்.

ஒரு சமயம் நபிமணி (ஸல்) அவர்களிடம் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது, நானும், சில நண்பர்களும் ஒரு பயணத்தில் ஓரிடத்தில் தங்கி இருந்தபோது, அந்த இடத்தில் ஒரு மண்ணறை இருப்பது எங்களுக்குத் தெரியாது. அந்த மண்ணறை வாசி தபாரக்கல்லதீ சூராவை ஓதி முடித்தார் என்று கூறியபோது அதற்கு நபிமணி (ஸல்) அவர்கள் அந்த மண்ணறை வாசி தபாரக்கல்லதீ சூராவை ஓதியதின் காரணமாக அவருடைய மண்ணறை தண்டனையை விட்டும் அல்லாஹ் அவரை காப்பாற்றி விட்டான் என்றார்கள். (நூல் - திர்மிதி)



பொருளடக்கம்

# மண்டை ஓடு பேசும் மர்மங்கள்

ஒரு நாள் ஈஸா (அலை) அவர்கள் சிரியா நாடு சென்று கொண்டிருந்தார்கள். வழியில் ஒரு மண்டை ஓட்டை கண்டு, ‘இறைவனே இவருக்கு உயிர் அளிப்பாயாக, நான் இவருடன் உரையாடி இவரின் வரலாற்றை அறிய விரும்புகிறேன்’ என்று கூறி இறைஞ்சினார். அதற்கு இறைவன் ‘ஈஸா நீர் அந்த மண்டை ஓட்டிடமே அதன் வரலாற்றைக் கேளும், அது கூறும்’ என்று இயம்பினான்.

உடனே ஈஸா (அலை) அவர்கள் அந்த மண்டை ஓட்டை நோக்கி, ‘மண்டை ஓடே, இறைவனின் கட்டளைக்கு இணங்கி என்னுடன் பேசு’ என்று கூறினார்.

அடுத்த கணம் அந்த மண்டை ஓடு ‘அஷ்ஹது அல்லா இலாஹா இல்லல்லாஹு’ என்று கலிமா உரைத்தது. நபியே, தாங்கள் விரும்புவதைக் கேளுங்கள் கூறுகிறேன் என்று உரைத்தது.

உடனே ஈஸா (அலை) அவர்கள், ‘நீ ஆணா? பெண்ணா? நீ நற்பண்புடையவனா? தீய பண்புடையவனா? அடிபணிந்து நடப்பவனாக இருந்தாயா? செல்வனா? ஏழையா? உன் அலுவல்கள் நல்லவையாய் இருந்தனவா? தீயவையாய் இருந்தனவா? நீ நெட்டையானவனா? குள்ளமானவனா? அறம் செய்பவனா? உலோபியா? உன் பெயர் என்ன? என்று சரமாரியாக வினா விடுத்தார்கள் .

அதற்கு அந்த மண்டை ஓடு கூறியது, ‘நான் ஓர் அரசனாக இருந்தேன். என் பெயர் ஜம்ஜாஹ். நான் நெட்டையானவனாக இருந்தேன். எனக்கு அடங்கி பல



பொருளடக்கம்

சிற்றரசர்கள் இருந்து வந்தனர். உலகப் பொருள்கள் அனைத்தும் எனக்கு கிடைத்திருந்தன. நான் எவ்விதக் குறையுமின்றி மகிழ்ச்சியுடன் வாழ்ந்து வந்தேன். நான் வீதியில் பவனி சென்றால் ஐயாயிரம் அடிமைகள் என் பின்னே அணிவகுத்து வந்து கொண்டிருப்பர். என்னிடம் ஐநூறு இசை வல்லுநர்கள் அடிமைகளாக இருந்தனர். துருக்கி நாட்டு ஆயிரம் அடிமைப் பெண்கள் பாடகிகளாக என்னிடம் பணியாற்றி வந்தனர். என்னிடம் ஆயிரம் ஆடலரசிகள் ஊழியம் புரிந்து வந்தார்கள். நான் நானூறு ஆண்டு காலம் இவ்வுலகை ஒரு குடையில் ஆண்டேன். நாளொன்றுக்கு ஆயிரம் தீனார் வீதம் அறம் செய்து வந்தேன். பற்பல நல்லறங்கள் ஆற்றினேன். எனினும் ஓரிறை வணக்கத்தை புறக்கணித்தேன். உருவ வழிபாடு மேற்கொண்டேன்.

அது கேட்ட ஈஸா (அலை) அவர்கள் நீ இறந்து எத்தனை ஆண்டுகளாகின்றன? எந்த நிலையில் நீ இறந்தாய்! உயிர் வாங்கும் வானவர் உம்மிடம் எந்த நிலையில் வந்தார்? என்று வினவினர்.

அதற்கு அந்த மண்டை ஓடு, 'நான் இறந்து ஒரு நூறு ஆண்டுகள் உருண்டோடிவிட்டன. கோடையில் ஒரு நாள் சோர்வுடன் மஞ்சணை மீது சாய்ந்தேன். காய்ச்சல் அதிகமாகியது. மருத்துவர் பலர் வந்து மருத்துவம் செய்தனர். பலனில்லை. அப்பொழுது, 'ஜம்ஜாஹின் உயிரைக் கைப்பற்றி விடுங்கள்' என்ற ஒலி கேட்டு அதிர்ச்சியுற்றேன். அப்பொழுது உயிர் வாங்கும் வானவர் பல முகங்களுடன் என் முன் காட்சி வழங்கினார். நான் அஞ்சி அழுது கெஞ்சி நடுங்கி உயிர்ப்

பிச்சை அளிக்குமாறு பெரிதும் மன்றாடினேன். எனினும் அவர் கேட்கவில்லை என்று மண்டை ஓடு கூறியது.

'சரி, நீ உயிர் வாங்கும் வானவரிடம் அவருடைய முகங்களைப் பற்றி விசாரித்தாயா?' என்று ஈஸா (அலை) அவர்கள் வினவினார்கள்.

'ஆம் விசாரித்தேன். அதற்கு அவர், 'நான் எதிரில் இருக்கும் என் முகத்தைக் கொண்டு இறை நம்பிக்கையாளரின் உயிரையும், வலது புறத்திலுள்ள முகத்தைக் கொண்டு விண்ணிலுள்ள உயிர்களையும், இடது புறத்தில் உள்ள முகத்தைக் கொண்டு இறை மறுப்பாளர்களின் உயிரையும் கைப்பற்றுகிறேன்' என்று கூறினார்' என இயம்பியது.

'சரி உனக்கு இறப்பு வேளை எவ்வாறு இருந்தது? உன் உயிர் எவ்வாறு பிரிந்தது?' என்று ஈஸா (அலை) அவர்கள் கேட்டார்.

மண்டை ஓடு கூறியது, 'நான் உயிர் வாங்கும் வானவரைக் கண்டேன். அவருடன் மற்றும் சில வானவர்களும் வந்திருந்தனர். அவர்களின் கையில் நெருப்பாலான சாட்டை இருந்தது. அவற்றைக் கொண்டு அவர்கள் என்னை அடித்தார்கள். அடி பொறுக்க இயலாது நான் அலறினேன். என்னை விட்டு விடுங்கள். என்னிடமுள்ள பொன்னையும் பொருளையும் தருகிறேன் என்று கூறினேன். அது கேட்டு அவர்கள் என்னை முன்னை விட பல மடங்கு அதிகமாக அடித்தார்கள். என் உடல் பஞ்சாய்ப் பறந்தது. 'நாணமற்றவனே, இறைவனுக்கு மாறு செய்த குற்றத்திற்குப் பகரமாக இறை மறுப்பவர்களிடமிருந்து இலஞ்சம்



பொருளடக்கம்

பெறுபவர்கள் நாங்களா? என்று கூறி என்னை ஓங்கி ஓங்கி அடித்தார்கள். 'என்னை விட்டு விடுங்கள், என் குழந்தைகளை இறைவன் பாதையில் உயிர்த்தியாகம் செய்கிறேன்' என்றேன். அதற்கு அவர்கள், ' இறைவன் கையூட்டுப் பெறுவதில்லை' என்று கூறிவிட்டனர்.

'இறுதியாக என் உயிர் என் உடலை விட்டுப் பிரிந்தது. நான் அடக்கம் செய்யப்பட்ட பின் என் உயிர் என்னிடம் மீண்டும் வந்தது.'

பயங்கரமான முகத்துடன் என்னிடம் முன்கர் நகீர் வந்தனர். நான் கதி கலங்கி விட்டேன். உன் இறைவன் யார்? என்று அவர்கள் வினவினர். 'நீங்கள் தாம் என்று நான் கூறினேன். அது கேட்டு அவர்கள் என்னை நையப் புடைத்தனர். நான் பிறக்காமலிருந்தால் நன்றாய் இருந்திருக்குமே என்று வருந்தினேன். அப்பொழுது முன்கர் நகீர் என்னை நோக்கி 'இறைவனுடைய இரணத்தை உண்டு விட்டு அவனுக்கு மாறு செய்தவனல்லவா?' என்று கூறி மீண்டும் அவர்கள் என்னை நையப் புடைத்தார்கள். அவர்களுடன் போட்டியிட்டுக் கொண்டு புதை குழியும் என்னை நெருக்கியது. என் உடல் நொறுங்கியது. பின்னர் நான் நரகத்தில் தள்ளப்பட்டேன். என் வாய் அடைக்கப்பட்டது.' இவ்வாறு கூறிய ஜம்ஜாஹ் பின்னர் தாம் நரகத்தில் பட்ட துன்பங்களை எடுத்துரைத்த பொழுது ஈஸா (அலை) அவர்களின் கண்கள் குளமாயின. ஜம்ஜாஹ் மீண்டும் பேச்சைத் தொடங்கினார். 'இறுதியில் நான் நெருப்பாலான பேழையில் அடைக்கப்பட்டேன். நூறாண்டுகளாக அந்த நெருப்புப் பேழையில் கிடந்து புழுவெனத் துடித்துக் கொண்டிருந்தேன். சற்று நேரத்திற்கு முன், 'ஜம்ஜாஹ்வை



பொருளடக்கம்

ஈஸா போகும் வழியில் போட்டு விடுங்கள், காரணம் அவன் உலகில் பல நற்செயல்களை ஆற்றினான். பல அடிமைகளுக்கு விடுதலை வழங்கினான். பசித்தோர்களுக்கு உணவளித்தான். உடையற்றோர்களுக்கு உடையளித்தான்' என்னும் ஒலியைக் கேட்டேன். அடுத்த கணம் நான் தாங்கள் வரும் வழியில் தூக்கி எறியப்பட்டேன். தங்களை காணும் பேறு பெற்றேன்.' என்றார் அவர்.

'அப்படியா? நீர் எந்தக் கூட்டத்தைச் சேர்ந்தவர்? ' என்று ஈஸா (அலை) அவர்கள் வினவினார்.

'நான் இல்யாஸ் (அலை) அவர்களின் கூட்டத்தைச் சேர்ந்தவன' என்றார் ஜும்ஜாஹ்.

'நல்லது, நீர் என்னிடமிருந்து எதனை விரும்புகிறீர்?' என்று ஈஸா (அலை) அவர்கள் வினவ அதற்கு ஜும்ஜாஹ், 'எனக்கு மீண்டும் உயிரளிக்குமாறு இறைஞ்சி என் வேதனை போக்குங்கள். நான் உலகில் அவனை வணங்கி சுவனப் பெருவாழ்வை எய்த விரும்புகிறேன்' என்று கேட்டுக் கொண்டார். அவ்விதமே ஈஸா (அலை) அவர்கள் இறைவனிடம் இறைஞ்சவே அதற்கு இறைவன் பதிலளிக்கையில் 'அவனுடைய பட்டோலையில் 'அவனை மீண்டும் உயிர் கொடுத்து அனுப்பப்படும்' என்றே எழுதப்பட்டுள்ளது. அவன் உலகில் அல்லவை போக்கி நல்லவை செய்தான். அறவாளனாக விளங்கினான்.' என்று பதில் கூறினான்.

இதன் பின் அவருடைய எலும்புகளையெல்லாம் ஈஸா (அலை) அவர்கள் ஒன்று கூட்டி 'நீங்கள் இறைவனின் ஆணைப்படி ஒன்று சேர்ந்து உயிர் பெற்றெழுக' என்று கூற

அவ்விதமே அவை ஆயின. ஜம்ஜாஹ் உயிர் பெற்றெழுந்தார். அவருடைய நாவில் 'அஷ்ஹது அல்லா இலாஹா இல்லல்லாஹு வ அஷ்ஹது அன்ன ஈஸா ரஸூலுல்லாஹ்' என்ற மூல மந்திரம் தவழ்ந்தது.

## கல்லுக்கும் இறையச்சம் உண்டு

இதற்குப் பிறகும் உங்கள் நெஞ்சங்கள் இறுகி விட்டன. அவை கல் பாறையைப் போன்றவை. அதை விடக் கடினமாக இருக்கின்றன. ஏனெனில் கல் பாறையிலிருந்து உதித்தோடும் ஆறுகளும் நிச்சயம் உண்டு. கல் பாறை வெடித்துப் பிளந்து அதிலிருந்து தண்ணீர் வெளிப்படுவதும் உண்டு. இன்னும் இறையச்சத்தால் (உச்சத்திலிருந்து) தண்ணீர் கீழே இறங்குவதுண்டு. நீங்கள் செய்வதைப் பற்றி அல்லாஹ் பாரா முகமாக இருக்கவில்லை.

*(அல்குர்ஆன் 2-74)*

## இறையச்சம் இருவகை

இறையச்சத்தை உள்ளத்தில் உறுதியாக்கிக் கொள்ள வேண்டும். இறையச்சம் இரண்டு விஷயங்களைக் கொண்டு தான் உறுதிப்படும். ஒன்று அவனை வணங்குவது. மற்றொன்று பாவத்தை விட்டு விலகிக் கொள்வது.

## பேசும் நரகம்

ஏ, உண்மை விசுவாசியே, நீ பாக்கியசாலி! உன் உள்ளத்தில் வீசும் சுடரொளியாகிய ஞானப் பிழம்பு என் ஜுவாலையை மங்கச் செய்து விட்டதே.

*(நூல் - இஹ்யா)*

## உண்மையும் பொய்யும்

நீங்கள் உண்மை பேசுவதை கடைபிடிப்பீராக. ஏனெனில் நிச்சயமாக அது சொர்க்க வாசல்களில் ஒரு வாசலாகும்.

நீங்கள் பொய் பேசுவதைப் பற்றி எச்சரிக்கிறேன். ஏனெனில் நிச்சயமாக அது நரக வாசல்களில் ஒரு வாசலாகும். இவ்வுலகில் வயிறு புடைக்க உணவு உண்பவர் நாளை மறுமையில் நீண்ட பசியுடைவராக இருப்பார்.

## பேசும் பூமி

'ஆதமுடைய மக்களே, நீங்கள் விரும்பியவைகளைச் சாப்பிடுங்கள். அல்லாஹ் மீது ஆணையாக நான் உங்களுடைய மாமிசங்களையும் தோல்களையும் சாப்பிடுவேன்' என்று ஒன்றுக்கு ஏழு முறை இந்த பூமி கூறிக் கொண்டே இருக்கிறது.

(நபிமொழி)

## உணர்வு கொள்ளுங்கள்

உங்களிடத்தில் கெட்ட எண்ணமும் பேராசையும் குவிந்து விட்டன. உங்கள் பிடரியிலேயே இறைவன் பிடி இருக்கிறது. அடுத்த வினாடியே மரணம் வரும் என்பதை மறந்து வாழுகிறீர்கள். பேராசையிலிருந்தும் கெட்ட எண்ணங்களிலிருந்தும் நீங்கி வாழ்பவர்கள் மரண வேளையில் நல்லவராகி விடுவார்கள்.

அலி (ரலி)

# அமரர்கள் அழுததேன்?

ஷைத்தான் அல்லாஹ்வுக்கு பணிய மறுத்தான். அவன் இட்ட கட்டளையை புறக்கணித்தான். அவனை அல்லாஹ் கடுமையாகத் தண்டித்தான். அந்த தண்டனையை கண்ணுற்ற அமரர்கள் கதி கலங்கினார்கள். ஜிபுரீலும், மீக்காயிலும் நிலை மறந்து அழுதார்கள். 'ஏன் அழுகின்றீர்கள்?' என்று அல்லாஹ் வினவ, 'யா அல்லாஹ் புகழுக்குரியவன் நீ. உன் அருள் கொடைகள் மக்களை சூழ்ந்திருக்கின்றன. ஆனால் கோபத்தின் நெருப்பு அமரர்களாகிய எங்களையே கதி கலங்கச் செய்து விட்டது' என்று கூறினார்கள்.

*திரு நபி (ஸல்)*

# இறையச்சம்

ஒரு சமயம் ஜிப்ரீல் (அலை) அவர்கள் இபுராம் நபி (அலை) அவர்களை நோக்கி, நீங்கள் அல்லாஹ்வின் தோழரல்லவா? நிங்கள் ஏன் அல்லாஹ்வுக்கு பயப்பட வேண்டும்? என்று வினவினார்.

உண்மைதான், அல்லாஹ் என் தோழன்தான். என் குற்றங்களை நினைக்கும் போது எங்கள் நட்புறவு மறந்து விடுகிறது என்றார்கள்.

*(நூல் இஹ்யா)*

# மண்ணறை சிந்தனை

மண்ணறை பக்கம் நின்று கொண்டு உலக விவகாரம், வீண் பேச்சுகள் பேசுவதை நபி (ஸல்) அவர்கள் கண்டித்துள்ளார்கள்.

*(ஹதீஸ்)*




பொருளடக்கம்

மண்ணறை மறுமையின் வாசல், மண்ணறையைக் கண்டு மறுமை வாழ்வினை எண்ணி வாழுங்கள்.

மண்ணறை பக்கம் சென்றால் விளையாட்டு, சிரிப்பு, உலகப் பேச்சுகளில் ஈடுபடாதீர்கள்.

*திருநபி (ஸல்)*

உயிருள்ளவர்கள் எப்படி உண்ணவும், பருகவும் தேவையாளராக இருக்கின்றனரோ, அதுபோல் இறப்பெய்தவர்களும் துஆ, பிரார்த்தனைகளை (எதிர்பார்த்து) தேவையாளராக உள்ளனர்.

## ஹஜ்ரத் ஸுப்யான் (ரலி)

எவன் ஒருவன் மண்ணறையைப் பார்த்தும் ஸலாம் சொல்லாமல் செல்வானேயானால் அவன் தன் மனதுக்கு வஞ்சகம் புரிந்தவனும், அந்த மண்ணறைவாசிக்கு கெடுதல் செய்தவனும் ஆவான்.

*அல்ஹதீஸ்*

## வாரிசுகளின் இல்லம் வரும் ரூஹ்

1. ஈத் பெருநாள்

2. ஆஷீரா பத்தாம் தினம் இரவும், பகலும்

3. ரஜப் மாதத்தின் ஜும்ஆ இரவும், பகலும்

4. ஷஃபான் பதினைந்தாம் இரவும், பகலும்

தம் வாரிசுகளின் இல்லத்திற்கு இறந்து விட்ட ரூஹ் வருகை தருகின்றது.

எங்களுக்காக தான தருமங்களை நன்மைகளை அனுப்புங்கள். வசதி இன்றேல் இந்த அழகான இரவில் எங்களுக்காக இரண்டு ரக்அத் தொழுது துஆ கேளுங்கள் என்று அந்த ரூஹ் கூறுகின்றது.

*அல்ஹதீஸ்*

## மண்ணறை வேதனையை விட்டும் விடுதலை

ஒவ்வொரு இரவிலும் தபாரக்கல்லதீ சூரா ஓதுவதும் மரண வேளையில் குல்ஹுவல்லாஹ் சூரா ஓதுவதும் வெள்ளிக் கிழமை இரவு அன்று பகலில் மரணம் அடைவதும் மண்ணறை வேதனையை விட்டு விடுதலை தரும்.

*ஹதீஸ்*

நபிமார்கள் அவர்களின் மண்ணறைகளில் உயிர் உள்ளவர்களாக இருக்கிறார்கள். அவர்கள் தொழுது கொண்டிருக்கிறார்கள்.

*நூல் - திர்மிதி*

## மண்ணறை வேதனை

இறைவனை நிராகரித்தவருக்கு மண்ணறையில் வேதனை இருப்பது போன்று மூஃமினான பாவிகளுக்கும் உண்டு. அவரவர் செயலுக்கு ஏற்ப சிலருக்கு அதிகமாக உண்டு. சிலருக்கு குறைவாகவும் இலகுவாகவும் ஏற்படும்.

*(தத்கிரதுல் குர்துபி)*

## மண்ணறை நினைவு

எவர் ஒருவர் மண்ணறையை அதிகமாக நினைவில் கொள்கிறாரோ அவர் தனது மண்ணறையை சொர்க்கத்தின் பூஞ்சோலையாக கண்டு கொள்வார்.

*சுஃப்யானுஸ்ஸவ்ரி (ரஹ்)*



பொருளடக்கம்

## மனசாட்சி உறங்கலாமா?

புழுதியில் பிறந்த மனிதன் இறைவன் மடியில் வளருகிறான். இறைவன் மடியில் வளருகிற மனிதன் இடையில் ஷைத்தானின் அறிவை நாடுகிறான். ஷைத்தானின் அறிவை நாடுகின்ற அவன் அழிவைத் தேடுகிறான். மனசாட்சி உறங்கும் போது ஷைத்தான் அவனை ஆட்சி செய்கிறான். துன்பங்களும் துயரங்களும் நேரும் போது அவனை விட்டு ஓடிப் போகிறான்.

## ஷைத்தான் ஆட்சி நிலைக்குமா?

ஓ முஸ்லிமே உன்னிடத்தில் இறைவன் இயற்கையான வைரத்தைக் கொடுத்தான். நீயோ கண்ணாடித் துண்டுகளை வைரமென நம்புகிறாய். உனது மடமைத்தனத்தால் ஷைததான் உன் மீது ஆட்சி செலுத்துகிறான்.

கருவிலே உருவாகி வந்த நீ சில காலம் இந்த உலகில் வாழ்ந்து நிலையான ஆட்சி செய்யக் கூடிய இறைவனுக்கு மாறு செய்து ஷைத்தானுடைய ஆட்சிக்கு உட்பட்டு உன் நாடித்துடிப்பும் இருதய மூச்சும் சில வினாடியில் நிற்பதற்கு முன் அவன் உன்னை விட்டே ஓடி விடுகிறான்.

## அந்தோ பரிதாபம்

நிலையான ஆட்சிக்கு சொந்தக்காரன் உன் நேரம் நெருங்கிவிட்டது என்று உன்னை அழைக்கின்றான். நீ மண்ணறைக்குப் போகின்றாய். உன் மீது இறைவன் குற்றப்பத்திரிகையை தாக்கல் செய்யப் போகிறான். நீ நிரபராதி என்று வாதாடுவதற்கு நீ நண்பனாகக் கருதிய



பொருளடக்கம்

ஷைத்தான் உன்னுடைய ஈமான் ஜோதியை அணைத்து விட்டானே! அந்தோ பரிதாபம்!!

*அல்லாமா இக்பால்*

## மூமின்களின் வாழ்வின் பயங்கள் ஆறு

1. தன்னை விட்டும் ஈமான் அகன்று விடுமோ என்ற பயம்.

2. தன்னோடிருக்கும் மலக்குகள் தனது தீய செயல்களை பதிவேட்டில் பதித்து மறுமையில் விசாரணையின் போது கொண்டு வந்து விடுவார்களோ என்ற பயம்.

3. தன்னுடைய நற்செயல்களை ஷைத்தான் கெடுத்து விடுவானோ என்ற பயம்.

4. தான் மறதி நிலையில் இருக்கும் சமயம் திடீரென இஸ்ராயில் வந்து உயிரைக் கைப்பற்றி விடுவாரோ என்ற பயம்.

5. உலக வாழ்வின் மாயம் தன்னை ஏமாறச் செய்திடுமோ என்ற பயம்.

6. மனைவி மக்களும், உற்றார் உறவினரும் இறைவன் பாதையை விட்டும் சிந்தனையை அகற்றி விடுவார்களோ என்ற பயம்.

இந்த நிலையில் மூமின்கள் வாழவேண்டும் என்று உதுமான் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

# எது வாழ்க்கை

யா அல்லாஹ் என்னை ஏழையாக வாழச் செய்வாயாக. என்னை ஏழையாக மரணிக்கச் செய்வாயாக. ஏழைகள கூட்டத்தில் எழுப்புவாயாக. என்று நபிமணி (ஸல்) அவர்கள் இறைவனிடம் துஆ கேட்டார்கள்.

*அறிவிப்பவர் - அனஸ் (ரலி) நூல் - திர்மிதி*

நபிமணி (ஸல்) அவர்கள் மரணிக்கும் வரை அனனாருடைய குடும்பத்தினர் இரண்டு தினம் தொடர்ந்து கோதுமை ரொட்டியை வயிறு நிரம்ப உண்ணவில்லை.

*அறிவிப்பவர் - ஆயிஷா நாயகி (ரலி)*

*நூல் - புகாரீ முஸ்லிம்*

கொஞ்சம் கோதுமைக்காக ஒரு யூதரிடம் நபி மணி (ஸல்) அவர்களின் இரும்புக் கவசம் அடமானம் வைக்கப்பட்ட நிலையில் அவர்கள் இந்த உலகை விட்டு மறைந்தார்கள்.

*அறிவிப்பவர் - ஆயிஷா*

*நூல் - புகாரீ*

ஹழ்ரத் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்: ஒரு சமயம் நான் நபிமணி (ஸல்) அவர்களிடம் வந்த பொழுது பேரீத்த ஓலைகளால் பின்னப்பட்ட பாயில் படுத்திருந்தார்கள். அந்த பாய்க்கும் அவர்களின் மேனிக்கும் இடையில் எந்த ஒரு விரிப்பும் இல்லை. அவர்கள் விலாவில் அந்த பாயில் அடையாளச் சின்னம் பதிந்திருந்தது. பேரீத்தம் மரப்பட்டைகளால் நிரப்பப்பட்ட தோல் தலையணையில் தலை வைத்து இருந்தார்கள்.



பொருளடக்கம்

இறைத்தூதே, நீங்கள் இறைவனிடம் துஆ செய்யுங்கள். அல்லாஹ் உங்கள் சமுதாயத்திற்கு நல்ல வசதியைக் கொடுப்பான். ரோம் பாரசீக நாட்டு மக்கள் நல்ல வசதியுடன் வாழ்ந்து வருகிறார்கள். அப்படி இருந்தும் அவர்கள் அல்லாஹ்வை தொழுவதில்லை என்று நான் கூறியபோது அவர்கள் என்னைப் பார்த்து

உமரே, இன்னும் நீங்கள் அதே எண்ணத்தில் தான் இருக்கிறீர்களா? அவர்களுக்கு சுவர்க்க வாழ்வு (ஒரு அறிவிப்பில்) துனியா அவர்களுக்கும் மறுமை நமக்கும் இருப்பதை நீங்கள் விரும்பவில்லையா? என்று நபிமணி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

*உமர் (ரலி) நூல் - புகாரி முஸ்லிம்*

ஒரு பயணி கொஞ்சம் ஓய்வு பெறுவதற்காக மரத்தின் நிழலில் அமர்ந்து விட்டுச் செல்கின்றானே அது போன்றே எனக்கும் இந்த உலகுக்கும் உள்ள உறவு.

*நபிமணி (ஸல்)*

*அறிவிப்பாளர் - இப்னு மஸ்வூத் (ரலி) நூல் - அஹ்மத்*

பேருக்கும் புகழுக்கும் அடிமையாகாத இறையச்சமுள்ள செல்வந்தரான அடியானை அல்லாஹ் நிச்சயமாக நேசிக்கிறான்.

*திருநபி (ஸல்) நூல் - முஸ்லிம்*

## மனிதனின் மதி மயக்கம்

அல்லாஹ் பாவங்களை மன்னிப்பவனும் நிகரில்லாத அன்புடையோனுமாகவும் இருக்கிறான். ஆகவே அவனுடைய அன்பு நிறைந்த பாவமன்னிப்பு எங்களுக்கு உண்டெனா ஆதரவு வைக்கிறோம் என்று சொல்லிக் கொண்டு அதை



பொருளடக்கம்

ஒன்றிப் பிடித்துக் கொண்டு எத்தகைய புண்ணிய அமல்களும் செய்யாமல் வீணாகக் காலம் கழிக்கின்றார்கள். இன்னொரு கூட்டத்தினர் தமது பாவச் செயல்களைவிட தமது நற்செயல்களே அதிகம் என்ற நினைவில் மதிமயங்கி கிடக்கின்றனர். இவர்கள் தாம் எத்தகைய பாவச் செயல்கள் புரிந்தாலும் அதைப் பற்றி மனதில் சீர்தூக்கிப் பார்க்காமல் தமது நன்மைகளை மட்டுமே நோக்கி பெருமிதமடைகிறார்கள். உதாரணாக இவர்களுள் ஒருவன் இரவிலும் பகலிலும் அல்லாஹ்விடம் தினமும் பாவமன்னிப்புக் கோரி நூறு அல்லது ஆயிரம் தடவை இஸ்திஃபாரோ, தஸ்பீஹோ செய்து கொண்டே இருப்பான். மற்ற நேரத்திலோ சகோதர முஸ்லிம்களைப் பற்றி அவதூறும், பொல்லாங்கும், புறமும் பேசுவான். அல்லாஹ்வின் பொருத்தத்திற்கு மாற்றமான வீண் விஷயங்களை கூறித் திரிவான். இவன் தான் ஒதி வரும் இஸ்திஃபாருக்கும், தஸ்பீஹுக்கும் எவ்வளவு கூலி கிடைக்கும் என்று அதை கணக்கிடுவானேயன்றி அல்லாஹ்வின் வெறுப்புக்கு பாத்திரமான பொய்யர்கள், பொல்லாங்குக்காரர்கள், கோளர்கள், வேஷதாரி, முனாபிகுகள் ஆகியோர்க்குரிய தண்டனை எவ்வளவு கடுமையானது என்பதை சிறிதேனும் நினைத்துப் பார்ப்பதே இல்லை. இவன் போக்கு அந்த காரத்தின் (இருட்டு) மூலபீடமாகும்.

அல்லாஹ்வை தஸ்பீஹ் செய்து கொண்டிருப்பதை விட இவன் நாவைப் பேணிக் காப்பது நலமாகும்.

*இமாம் கஸ்ஸாலி (ரஹ்)*

# புரிந்து கொள்

மார்க்கத்தைப் பற்றிய நினைவால் உன் கண்கள் கண்ணீரை சிந்தட்டும். உன் செல்ல மகன் மரணித்து விட்டால் உலக முடிவு நாள் வந்து விட்டதாகக் கதறி கதறி அழுகின்றாயே உன் உள்ளத்தில் மார்க்கம், தீன் இறந்து விட்டதே, அதைப் பற்றி கவலையும், கண்ணீரும் வடிக்கின்றாயா? மார்க்க விஷயங்களில் அலட்சியங் கொண்டு நீ செய்யும் பாவக் காரியங்களால் உனக்கு நிகழும் வேதனையைப் பார்த்து உன்னோடு இருக்கும் மலக்குகள் உன் மீது இரக்கம் கொண்டு அழுகின்றார்கள். ஆனால் நீ கவலையற்றவனாயிருக்கிறாய். உனக்கு அறிவுயிருந்திருந்தால் உன்னிடம் மார்க்க வழி முறை இல்லாததைக் குறித்து நீ கண்ணீர் வடித்திருப்பாயே. குடி ஏறாத வீடு போலவும், உண்ணப்படாத உணவு போலவும் யார் கண்ணுக்கும் தென்படாத பெருஞ் செல்வம் போலவும் உன் நிலையாகி விட்டதே. இதனை நீ புரிந்து கொள்ள வேண்டாமா?

-கஃதுல் அஃலம்

# மறுமையைப் பற்றி மாநபி (ஸல்)

ஒரு சமயம் மாநபி (ஸல்) அவர்கள், தன் மனைவியரான ஆயிஷா (ரலி) அவர்களின் மடியில் தலை வைத்து தூங்கிக் கொண்டிருந்தார்கள். அந்நிலையில் ஆயிஷா (ரலி) அவர்கள் மறுமையின் நினைவால் கண்ணீர் வடிய அழுதாகள். சிந்திய கண்ணீர் துளிகள் செம்மல் நபிமணி (ஸல்) அவர்களின் கன்னத்தில் விழுந்தன. திடீரென விழித்துக் கொண்ட நபிமணி (ஸல), 'ஆயிஷா, ஏன் அழுகின்றாய்?' என்று கேட்டார்கள்.



பொருளடக்கம்

நாயகமே, நாம் இருவரும் இங்கே ஒன்றாக இணைந்து வாழ்வது போன்று மறுமையில் நாம் இவ்வாறு நெருங்கிப் பழக முடியுமா? என்ற நினைவுதான் என் அழுகையின் காரணம் என்று ஆயிஷா நாயகி பதில் சொன்னார்கள்.

ஆயிஷா எனது உயிர் யார் கைவசம் உள்ளதோ அவன் மீது ஆணையாக மறுமையில் மூன்று இடங்களில் ஒவ்வொரு ஆத்மாவும் தன்னைப் பற்றியே நினைக்குமே தவிர மற்றவர்களைப் பற்றி ஒரு போதும் நினைக்கவே முடியாது.

## மூன்று இடங்கள்

1. நன்மை, தீமை நிறுக்கப்படும் சமயத்தில் நன்மை அதிகமுள்ளதோ, தீமை அதிகமுள்ளதோ என்று கவனிக்கும் இடதத்தில்

2. வலது கையில் பட்டோலை வழங்கப்படுமா அல்லது இடது கையில் பட்டோலை வழங்கப்படுமா? என்று கவனிக்கும் சமயத்திலும்

3. ஸிராத்துல் முஸ்தகீம் பாலத்தைக் கடக்கக் கூடும் சமயத்திலும் எந்த மனிதனும் மற்றவர் நிலையைப் பற்றி சிந்திக்கவே முடியாது என்று திருநபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

## மோசடி

எவரேனும் மோசம் செய்தால் அவர் அந்த மோசம் செய்த பொருளையும் மறுமை நாளில் (தம்முடன்) கொண்டு வரவேண்டி இருக்கும்.

(அல்குர்ஆன் 3-161)



பொருளடக்கம்

ரிபாஆ (ரலி) அவர்கள் ஒரு அடிமையை நபிமணி (ஸல்) அவர்களுக்கு அன்பளிப்பாக கொடுத்தார்கள், அந்த அடிமை நபிமணி (ஸல்) அவர்களுடன் கைபர் யுத்தத்திற்குச் சென்றார். ஒரு சமயம் அந்த அடிமை நபிமணி (ஸல்) அவர்களின் ஒட்டகத்தின் மீது சாமான்களை வைத்து கட்டிக் கொண்டிருந்தார். அது சமயம் அவர் மீது ஒரு அம்பு வந்து பாய்ந்தது. அந்த இடத்திலேயே அவர் ஷஹீதானார். இதனை கண்டு ஓடி வந்த ஜனங்கள் வாழ்த்துக் கூறினர். ஏன் என்றால் நபிமணி (ஸல்) அவர்கள் அடிமை என்பதால் வாழ்த்தினர். இதனைக் காணும் நபிமணி (ஸல்) அவர்கள், 'இல்லை, இல்லை; இவர் ஒரு போர்வை எடுத்து மோசடி செய்து விட்டார். அது இப்போது நெருப்பாக மாறி அவரைச் சுற்றி வளைத்துக் கொண்டிருக்கிறது.

நாளை கியாமத்து நாளில் அந்த மோசடியை தன் மீது சுமத்தப்பட்டு நீதிமன்றத்திற்குக் கொண்டு வரப்படுவார்'.

நூல் : மிஷ்காத்

## மோசடிப் பொருள் முதுகின் மேலே

மோசடி செய்வது பெரும் பாவமாகும். கியாம நாளில் முதுகின் மேல் அப்பாவங்களை சுமக்க நேரிடும்.

ஒருவருடைய பிடரியில் கனைத்துக் கொண்டிருக்கும நிலையிலுள்ள குதிரை ஏற்றப்பட்டிருக்கும். அவன் என்னைப் பார்த்து, 'அல்லாஹ்வின் ரஸூலே, என்னைக் காப்பாற்றுங்கள்' என்று அலறுவான். அதற்கு நான், 'என் உதவி உனக்கு கிடையாது இதனை நான் உலகில் இருக்கும்போதே அறிவித்து விட்டேன்' என்று கூறுவேன்.

'தங்கம், வெள்ளி, ஜவுளி போன்ற அசையாத பொருள் சிலருடைய பிடரியில் இருக்கும்., அவர்கள் என்னைப் பார்த்து தம்மைக் காப்பாற்றுமாறு மன்றாடுவார்கள். நான் முன்பே உங்களுக்கு இதனைப் பற்றி கூறிவிட்டேன் என்று பதிலளிப்பேன்' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

*அறிவிப்பவர் - அபூஹுரைரா (ரலி)*

*நூல் - புகாரி*

## ஆராய்ந்து அளந்து பேச வேண்டும்

பிறரைப் பழித்தல் குற்றமாகும். பிறரைப் பார்த்து பரிகாசம் செய்யாதீர்கள். ஏனெனில் பரிகாசம் செய்பவரை விட பரிகாசம் செய்யப்படுபவர் நல்லவராக இருக்கலாம் என திருமறை கூறுகிறது. பிறர் மனம் புண்படாது நடந்து கொள்வதே அனுமதிக்கப்பட்டுள்ளது. பிறரை சந்தோஷப் படுத்துவதற்காக மட்டும் சொற்ப அளவே விகடம் பேசலாம். அதிகமாய் சிரிப்பது இறைவன் மீதுள்ள அச்சத்தை அகற்றுகின்றது. நம் எதிர்காலமோ, மறுமை நிலையோ தெரியாதிருக்கும் போது அதிக சிரிப் புக்கு இடமில்லை. நான் அறிந்துள்ளதை நீங்களும் அறிந்திருப்பின் சிறிதே சிரிப்பீர்கள். அதிகமாய் அழுவீர்கள் என பெருமானார் (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். கேட்போர் கூட வெறுக்கத்தக்க வார்த்தைகளை கூறக் கூடாது. எவ்வளவு அருவருப்பான விஷயங்களையும் அழகிய வார்த்தைகளால் தெரிவிக்க வேண்டும். நாவால் நிகழும் தீமைகளை விட்டும் நாம் தப்பத்துக் கொள்ள வேண்டுமானால் நம் பேச்சுக்கள் ஒவ்வொன்றையும் ஆராய்ந்து அளந்து பேச வேண்டும்.

*இமாம் கஸ்ஸாலி (ரஹ்)*

மறதி கொண்டவனே, உன்னை நேசிப்பவனையே நீ நேசம் கொள். உன்னை தேடுபவனையே நீ தேடிக் கொள். தன்னை நேசிப்பவனையே அல்லாஹ்வும் நேசிக்கிறான். என்றும், அடியானே! உன்னை சந்திக்க ஆவல் கொள்கிறேன் என்றும் அல்லாஹ் கூறியிருப்பதை சிந்தித்துப்பார். அவனை வணங்குவதற்காகவே உன்னைப் படைத்தான். நீ வீண் விளையாட்டில் பொழுது போக்காதே.

நம் தந்தை ஆதம் (அலை) அவர்கள் ஒரு சில வினாடி இறைவனை மறந்து சுவர்க்கத்திலேயே இருந்து விட நினைத்தார்கள். அது மட்டுமா? யாகூப் நபி (அலை) அவர்கள் ஒரு வினாடி இறைவனை மறந்து தம் செல்வ மகனுக்கு இதயத்தில் இடம் கொடுத்ததால், தான் கன் - ஆன் நகரிலும் எகிப்தில் தம் மகனுமாகப் பிரிக்கப்பட்டனர். ஏன் எம்பெருமான் நபி (ஸல்) அவர்கள் தம் இதயத்தில் இறைவன் இருக்க வேண்டியதிருக்க தம் மனைவியார் ஆயிஷா (ரலி) அவர்களை சில வினாடி ஏற்றி வைத்ததினால் அந்தோ மனைவியார் மீது வஞ்சகர்கள் வீண் பழி கூறவும் அதனால் சில நாள் வரை தமது தர்ம பத்தினி முகத்தைக் கூட பார்க்காமல் வேதனையடையவும் நேரிட்டதே. வலிமையுள்ள இறைவனை மறக்கலாமா?

(கஃவ்துல் அஃலம்)

அழகு முகம் படைத்தவர்களே, எத்தனையோ அழகு முகங்கள் நரக நெருப்பில் விழுந்து கரிக்கப்படுகின்றன. எத்தனையோ செல்வந்தர் அதில் மீள முடியாமல் வேதனையில் துடிக்கிறார்கள்.

## இறைவனுக்கு அஞ்சுங்கள்

மறுமையில் கேட்கும் கேள்விகளுக்குப் பதில் சொல்ல உங்களைத் தயார் படுத்திக் கொள்ளுங்கள்.

நீங்கள் மறுஉலகில் இறைவன் தண்டனையிலிருந்து தப்ப வேண்டுமா? முதியவரை தகப்பனாக, வாலிபரை உடன் பிறப்பாக, சிறுவர்களை சொந்தக் குழந்தைகளாகக் கருதி நேசம் காட்ட வேண்டும். உற்ற சகோதரர்களுடன் எவ்வாறு பழகுவீர்களோ அவ்வாறு நடந்து கொள்ள வேண்டும். மற்ற பெண்களை உங்கள் தாயார்களாகவும், சகோதரிகளாகவும் கருத வேண்டும்.

*புலைல் பின் இயாஸ் (ரஹ்)*

## மனிதர்கள் மூன்று வகையினர்

உண்மையை எவர் கூறிடினும் அதனை உண்மையென்று ஒத்துக் கொள்வார்கள். அவர்களுக்கு பய பக்தியுடையோர்கள் என்றும் 'மூமின்கள்' (விசுவாசிகள்) என்றும் பெயர் கூறப் பெறுகின்றது.

உண்மையை எவர் கூறினாலும் அதனை மறுப்பவர்கள் அதற்கு தெளிவான அத்தாட்சிகளும், ஆதாரங்களும் எவ்வளவு இருந்த போதிலும் அதனை மனமுரண்பாடாகவே மறுப்பவர்கள். அவர்களை இறைவன் தன் திருமறையில் காபிர்கள் (நிராகரிப்போர்கள்) என்று கூறுகிறான்.

உறுதியற்றவர்கள், கொள்கைப் பிடிப்பு இல்லாதவர்கள் இவர்கள் முஸ்லிம்களைக் கண்டால் நாங்களும் உண்மை முஸ்லிம்கள் தான் என்று கூறுவார்கள். பின்பு அவர்களை



பொருளடக்கம்

விட்டு நிராகரிப்போரிடம் சென்று விட்டால் நாங்கள் முஸ்லிம்களல்ல. உங்களைப் போலவே (காபிர்கள்) நிராகரிப்போரே என்றும் கூறுவார்கள். இவர்களை இறைவன் தன் திருமறையில் உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசும் 'முனாபிக்குகள்' (நயவஞ்சகர்கள்) என்று கூறுகிறான்.

## அற்ப இன்பம்

ஒரு சமயம் அபூஹுரைரா (ரலி) அவர்களை பெருமானார் (ஸல்) அவர்கள் எலும்புகளும், கந்தல் துணிகளும் குவிந்து கிடந்த இடத்திற்கு அழைத்துச் சென்றார்கள். அந்த இடம் பார்ப்பதற்கு அருவருப்பாகவும், கொட்டி வைக்கப்பட்ட சாணக் குவியலின் நாற்றம் உடையதாகவும் இருந்து குடலைப் பிடுங்கியது. அவ்வளவு மோசமான இடத்திலுள்ள எலும்புத் துண்டை பெருமானார் (ஸல்) அவர்கள் சுட்டிக்காட்டி, 'அபூஹுரைராவே! இந்த எலும்புத் துண்டைப் பாரும். இந்த மக்கிப்போன எலும்புத் துண்டை இப்போது யாரும் தொடுவதில்லை. ஆனால் ஒரு காலத்தில் இது மாமிசமும், நரம்பும், உதிரமும் சேர்ந்து கவர்ச்சிகரமான தோற்றத்தைப் பெற்றிருந்தது. அப்போது இந்த எலும்புத் துண்டு உயிரினத்தின் முக்கியமான பகுதி. அந்த உயிர் இந்த உலகில் எத்தனையோ ஆசைகளை வளர்த்துக் கொண்டிருந்தது. இந்த எலும்புத் துண்டு அந்த காலத்தில் எங்கிருந்ததோ நமக்குத் தெரியாது. ஆனால் இப்போது இது அசுத்தத்தில் புரண்டு கொண்டிருக்கிறது. இதை ஏறெடுத்துப் பார்ப்பார் யாருமில்லை என்று கூறி மேலும் பெருமானார் (ஸல்) அவர்கள் தொடர்ந்தார்கள்.

அபூஹுரைராவே! அந்த கிழிந்த துணியைப் பாரும். பார்ப்பதற்கே அருவருப்பாக இருக்கிறது. இந்த கிழிந்து போன துணி ஒரு காலத்தில் ஓர் அழகிய ஆடையொன்றின் பகுதி. அந்த ஆடையை அணிந்தவருக்கு ஒரு காலத்தில் கண்ணியத்தையும், மதிப்பையும் தேடித்தந்தது. மாட மாளிகைகளைக் கட்ட வேண்டுமென்று மனக்கோட்டை கட்டிய எத்தனையோ மனிதர்கள் மண்ணுக்கடியில் இருட்டறையில் அமுங்கிப்போய்விட்டார்கள்.

ஆசையுடன் அணிந்த உடைகள் கந்தல் கந்தலாக மூலைக்கு மூலை கிடக்கின்றன. இந்த துணிகளை அணிந்திருந்த மக்கள் எவ்வளவு ஆனந்தமாக நடந்து சென்றிருப்பார்கள். ஆனால் இப்போது யாரேனும் இவைகளை ஏறிட்டுப் பார்க்கின்றார்களா? அபூஹுரைராவே இதுதான் உலகம் புரிந்து கொண்டீரா? என்று அறிவித்தார்கள்.

மேற்கண்ட விளக்கங்களைக் கேட்ட அபூஹுரைரா (ரலி) அவர்கள் கல்லாக நின்றார்கள். அவர்கள் கண்கள் நீரைக் கக்கின.

## இதுதான் உலகம்

ஒரு சமயம் பெருமானார் (ஸல்) அவர்கள் வீதி வழியே சென்று கொண்டிருந்தார்கள். தெருவின் ஓர் இடத்தில் செத்த ஆடு ஒன்று கேட்பாரற்றுக் கிடந்தது. 'இந்த ஆட்டை இதன் உரிமையாளர் எவ்வளவு கேவலமாக மதித்து வீசி எறிந்து விட்டார்? வீசி எறிந்ததற்குக் காரணம் என்ன என்று உங்களுக்குத் தெரியுமா?' என்று தோழர்களிடம் பெருமானார் (ஸல்) அவர்கள் கேட்டார்கள். 'செத்த ஆடு அற்பமானது என்ற



பொருளடக்கம்

காரணத்தினால் இதன் உரிமையாளர் துச்சமாக மதித்து எறிந்துவிட்டார்கள்' என்று தோழர்கள் விடையளித்தார்கள். உடனே பெருமானார் (ஸல்) அவர்கள் கீழ்கண்டவாறு கூறினார்கள்.

'ஆம், உண்மைதான், இந்த செத்த ஆட்டை நீங்கள் எப்படி மதிக்கிறீர்களோ அப்படித்தான் இறைவன் இம்மையை மதிக்கிறான்.'

மற்றொரு சமயம் பெருமானார் (ஸல்) அவர்கள் கூறினார்கள், 'இம்மை என்பது விசுவாசிகளுக்குச் சிறை போன்றது. ஆனால் நிராகரிப்பவர்களுக்கு இதுதான் சுவர்க்கம்.'

மற்றொரு சமயம் கிழிந்து போன துணியையும், மக்கிப்போன எலும்பையும் எடுத்துக் காட்டி 'இதுதான் உலகம்' என்றார்கள். உங்கள் அலங்காரங்கள் அனைத்தும் விரைவில் கிழித்தெறியப்படும். அழகான உங்கள் உடல் விரைவில் எலும்புகளாக மாறிவிடும்' என்பதை விளக்குவதற்காக வேண்டி அவர்கள் இப்படிச் சிலேடையாகக் கூறினார்கள்.

## உண்மை உள்ளங்கள் உணரட்டும்

சவூதி அரேபியாவில் உம்மல் சாஹிக் என்னும் கிராமத்தில் நடந்த வேதனை வெட்கப்பட வேண்டிய விஷயம் அந்தக் கிராமத்தில் ஒரு குடும்பம் விடிய விடிய வீடியோ படம் பார்த்துக் கொண்டிருந்த போது விடியும் நேரத்திற்கு முன் பக்கத்திலிருந்த பள்ளி வாசலில் பஜ்ரு பாங்கொலி கேட்டது வீடியோ பார்த்துக் கொண்டிருந்தவர்களில் அந்த வீட்டுக்கார பெண் கழுதை கத்துரான் என்று வீடியோவின் மோகத்தில்

தன்னை மறந்து கூறிவிட்டாள்! காலை கதிரவன் எழுந்து உச்சி நேரம் வந்தான், அந்த நேரத்தில் கழுதை கத்துரான் என்று கூறிய பெண் திடீரென மரணித்துவிட்டாள், அவளை அடக்கம் பண்ணுவதற்கு தொழுகை நடத்த இமாம் முன் வந்தார்! அல்லாஹு அக்பர் என்று தக்பீர் கட்ட வேண்டிய இமாமின் நாவில் அல்லாஹ் என்று மட்டும் வெளியே வந்தது அக்பர் என்ற சொல் வெளியே வரவில்லை. அவர் மயக்கமான நிலை கண்ட ஒருவர் இமாமை அப்புறப்படுத்தி மற்றொருவரை முன் நிறுத்த அவருக்கும் அதே நிலை ஏற்பட்டது, இவ்வாறு மூன்று நபருக்கும் அல்லாஹு அக்பர் என்ற சொல் நாவிலிருந்து வெளியே வரவில்லை; இந்த நிலையை கண்ட ஊர் தலைவர் முன்வந்து ஏதோ ஒரு தவறு நடந்துள்ளது என்று சொன்னதுடன் ஜனாஸாவின் மேல் மூடியைத் திறந்து அந்த பெண்ணின் முகத்தில் அணிவிக்கப்பட கபன் துணியை நீக்கியபோது, என்ன ஆச்சரியம்! அவளுடைய முகம் கழுதை முகமாக இருப்பதைப் பார்த்தவர்கள் அதிர்ச்சி அடைந்தனர்! அந்தப் பெண்ணைப் பற்றி அவளுடைய குடும்பத்தாரிடம் விசாரித்தபோது; நாங்கள் விடிய விடிய வீடியோ படம் போட்டு பார்த்துக் கொண்டிருந்தோம்! விடியும் சமயம் பள்ளி வாசலிலிருந்து பஜ்ரு பாங்கு சப்தம் கேட்டது! மரணித்த பெண்மணி கழுதை கத்தறான் என்று மட்டும் சொன்னார் என்று அவர்கள் கூறினர்! அந்த வார்த்தை தான் இந்தப் பெண்ணின் முகத்தை கழுதை முகமாக மாற்றப்பட்டிருக்கிறது! என்று ஊர் தலைவர் கூறினாரார்!

*அறிவித்தவர்: டெஹ்ரான் ஏர் போட்டின் காவல் துறையில் பணிபுரிபவர் அப்துல்லா அலி அல் ஹன்னி.*

*இவர் மூலம் அறிந்து கூறியவர்: ஆப்பனூர். இ.ஜபருல்லாஹ் B.SC. அவர்களுக்கு நன்றி.*



பொருளடக்கம்

# பயகம்பர் நபியின் பத்து கட்டளைகள்.

1. தொழுகையை அதன் குறித்த சமயத்தில் தொழுவதில் விரைவு கொள்ளுங்கள்.

2. கைப்பொருள் கைவிட்டுப் போவுதற்கு முன் தான, தருமங்கள் கொடுப்பதில் விரைவு கொள்ளுங்கள்.

3. வயதும் (காலமும்) வீணாகும் முன் நல்ல காரியம் செய்வதில் விரைவு கொள்ளுங்கள்.

4. வயது வந்த பெண் மக்களை திருமணம் செய்து தருவதில் விரைவு கொள்ளுங்கள்

5. மய்யித்தை அடக்கம் செய்து விடுவதில் விரைந்து கொள்ளுங்கள்.

6. மரணம் வரும் முன் மறுமைக்குரிய நற்செயல் ஆற்றுவதில் விரைவு கொள்ளுங்கள்.

7. கைசேதம் (மனம் வருத்தம்) அடைவதற்கு முன் உங்களுக்கிடையே ஏற்படும் சண்டை சச்சரவுகளை சமாதானம் மூலம் தீர்த்துக் கொள்ளுவதில் விரைந்து கொள்ளுங்கள்.

8. மரணத்திற்கு முன் பாவமன்னிப்பு தேடிக் கொள்வதில் விரை ந்து கொள்ளுங்கள்.

9. செல்வம் இருக்கும்போதே கடமையான ஹஜ்ஜுச் செய்வதில் விரைந்து கொள்ளுங்கள்.

10. வாங்கிய கடனை திருப்பித் தருவதில் விரைந்து கொள்ளுங்கள்.



பொருளடக்கம்

## ஆதம் (அலை) கண்ணீர் துஆ!

யா அல்லாஹ்! நான் குற்றவாளி, எனது குற்றம் எனது துரோகம் என் நெஞ்சை துளைக்கிறது. எனக்கு நீ கொடுத்த வேதனை கொடியது. புனிதமான சுகபோகத்தை அனுபவித்த பிறகு இந்த இழிவான நிலையை உண்டாக்கிக் கொண்டு தத்தளித்துக் கொண்டிருக்கிறேன். பெருமையோடு இருந்த நான் இப்போது கேவலப்படுகிறேன்.

## இறைவன் பேசுகிறான்.

ஆதமே! இந்த தண்டனை உமக்கு மட்டுமல்ல. நீர் செய்த குற்றத்தை செய்யும் ஒவ்வொருவருக்கும் இப்படித்தான் நான் தண்டனை கொடுப்பேன். நான் எத்தனையோ விதமான மாண்பினை உமக்கு கொடுத்தேன். ஆனால் என் கட்டளையை மீறிவிட்டீர். குற்றவாளிகள் தண்டனையை அனுபவித்துத்தான் ஆக வேண்டும்.

நூல்: இஹ்யா.

## நரகத்திற்குரியவர்கள்!

| நரகத்தின் பெயர் | அவற்றில் தள்ளப்படுபவர்கள் |
|---|---|
| 1) ஜஹன்னம் | முஹம்மது நபி (ஸல்) அவர்களின் உம்மத்தினரில் உள்ள பெரும் பாவிகள். |
| 2) லளா | முனாபிகீன்கள் (நயவஞ்சகர்கள்) |
| 3) சக்கர் | யூதர்களும், நஸாராக்களும். |
| 4) ஹுத்தமா | நெருப்பை வணங்குபவர்கள் |
| 5) ஜஹீம் | சிலை வணக்கஞ் செய்பவர்கள் |
| 6) சார் | எஃஜூஜ், மஃஜூஜ் கூட்டத்தார் |
| 7) ஹாவியா | கெட்ட ஜின், ஷைத்தான்கள் மற்றும் |

அல்லாஹ்வையும் அவனது நபிமார்களையும் அவனது திருக்குர்ஆனையும் ஒதுக்கியும் இஷ்டம்போல் திரிபவர்கள்!

# சொர்க்கத்துக்குரியவர்கள்!

| சொர்க்கத்தின் பெயர்கள் | அவற்றில் அனுமதிக்கப்படுபவர்கள் |
|---|---|
| 1.தாருல் ஜலால் | நபிமார்கள், இறைவனுக்காக உயிர் தியாகம் புரிந்தவர்கள் |
| தர்மம் செய்தவர்கள்! | |
| 2.தாருஸ்ஸலாம் | மார்க்கப் பேணுதலோடு ஒளு செய்து ஜமாஅத்துடன் தொழுதவர்கள்! |
| 3.ஜன்னத்துல் மஃவா | ஏழைவரி (ஜக்காத்)முறையாக ஈந்தவர்கள்! |
| 4.ஜன்னத்துல் குல்து | நன்மைக்குத்தூண்டு கோலாகவும் தீமைக்கு தடுப்பு சுவராகவும் விளங்குபவர்கள். |
| 5.ஜன்னத்துன் னயீம் | ஐம்புலன் அடக்கத்துடன் நேர்மையாக வாழ்பவர்கள் |
| 6.தாருல் கரார் | புனித ஹஜ்ஜையும் உம்ராவையும் நிறைவேற்றிய பாக்கியவான்கள். |
| 7.ஜன்னத்துல் பிர்தௌஸ் | அறப்போர் வீரர்கள் |
| 8.ஜன்னத்துல் அத்னு | இன்முகத்துடன் பெற்றோருக்குப் பணிந்தும் ஹராம் ஹலாலை அனுசரித்தும் மனிதப் பண்புடன் எல்லோருடனும் உறவும் ஒற்றுமையும் பேணி நடந்தவர்கள். |

## சுவர்க்கம் நுழைய வைக்கும் காரியம்-4.

1) இறைவனுக்கு இணை வைக்காதே!

2)குறித்த நேரத்தில் தொழுவதை நிறுத்தாதே!

3)பந்துக்களை ஆதரித்துக் கொள்!

4)ஜகாத்(ஏழைவரி)யை கொடுத்து விடு!

நூல்: புகாரீ முஸ்லிம்



பொருளடக்கம்

# மரணித்தவர்களுக்காக ஓதப்படும் துஆ.

மொழி பெயர்ப்பு

இஸ்லாமிய மார்க்கத்தின் பால் எங்களுக்கு வழிகாட்டி எங்கள் மீது அருள் புரிந்த அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும்! யா அல்லாஹ் எங்களின் நபியும் தலைவரும் எங்களுக்காகப் பரிந்துரைப்பவருமான நபி முஹம்மது (ஸல்) அவர்களின் மீது அன்னாரின் குடும்பத்தார் தோழர்கள் மீதும் அருளும், அமைதியும், அபிவிருத்தியும் சொரிந்தருள்வாயாக! யா அல்லாஹ் இப்போது நாங்கள் குர்ஆனிலிருந்து ஓதியவற்றிற்குரிய நற்கூலி போன்றதொரு நற்கூலியை எங்களிலிருந்தும் சேர்த்து வைக்கும் நன்கொடையாகவும் பரிபூரணமான காணிக்கையாகவும் எங்களின் தலைவரும் நபியும் எஜமானருமான முஹம்மது (ஸல்) அவர்கள் மீதும் அவர்கள் தோழர்கள், தோழர்களின் தோழர்கள் மற்றும் ஏனைய ஷுஹதாக்களான தியாகிகள் தீர்க்கதரிசிகள் நல்லடியார்கள் அனைவர் மீது சேர்த்திடுவாயாக! குறிப்பாக நாங்கள் யாரை நாடி உன் திருமறையிலிருந்து ஓதினோமோ அத்தகையவரின் ஆன்மாவின் மீது சேர்த்தருள்வாயாக! யா அல்லாஹ் அவருடைய தனித்த நிலையினை இன்பப் பொழுதுபோக்காக ஆக்கிவிடுவாயாக! அவருடைய நடுக்கங்களை (நீக்கி) பயமற்ற நிலைமையில் ஆக்கிவிடுவாயாக! யா அல்லாஹ் அவருடைய இருப்பிடத்தை ஒளிமயமாக்கி விடுவாயாக! யா அல்லாஹ் அவருடைய பதவியை உயர்த்திடுவாயாக! மேலும் எங்களுக்கும், அவருக்கும் துணையாளனாக ஆக்கிடுவாயாக! யா அல்லாஹ் அவருடைய மண்ணறையை சுவனப் பூங்காக்களிலிருந்தும் ஒரு பூங்காவாக ஆக்கிவிடுவாயாக! யா அல்லாஹ் நரகச்



பொருளடக்கம்

குழிகளிலிருந்தும் ஒரு குழியாக அவருடைய மண்ணறையை ஆக்காதிருப்பாயாக! யா அல்லாஹ் இவர் நன்மை செய்தவராயின் இவர் நன்மைகளை அதிகமாக்குவாயாக! நன்மை செய்யாதவராயின் இவருடைய தீமைகளை விட்டுவிடுவாயாக! இவருடைய நன்மையை ஏற்றருள்வாயாக! இவருக்கு உன் அர்ஷின் நிழலின்றி வேறு நிழலில்லாத நாளில் அந்த நிழலை வழங்கிடுவாயாக!

சந்தேகத்திற்கு இடமற்ற ஒரு நாளுக்காக மனிதர்களை ஒன்று சேர்ப்பவனே! எங்களை எல்லாம் நீ அருள்புரிந்த நபிமார்கள் மெய்யடியார்கள் ஷுஹதாக்கள் நல்லடியார்கள் ஆகியோர்களுடன் எழுப்புவாயாக! யா அல்லாஹ் மக்கிய உடல்களின் நாயனே (தூள்) தூளான எலும்புகளின் இரட்சகனே பெருமானாரின் மன்றாட்டத்தை இவருக்கும் எங்களுக்கும் தருவாயாக! உன் திருத்தரிசனத்தை வழங்கிடுவாயாக! உன் திருத்தூதர் நபி (ஸல்) அவர்களின் மீதும், அன்னார் குடும்பத்தார்கள், தோழர்கள் மீதும் உன் அருளையும் அமைதியையும், அபிவிருத்தியையும் சொரிந்தருள் புரிவாயாக! எல்லாப் புகழும் அனைத்துலக அதிபதியான அல்லாஹ்ுக்கே உரித்தாகுக ஆமீன். யாரப்பல் ஆலமீன்.



# பொருளடக்கம்



பொருளடக்கம்